உ

சிவமயம்.

ஸ்ரீலஸ்ரீ

# நா. கதிரைவேற் பிள்ளை அவர்கள்

# சரித்திரம்.



சென்னை,

வேதாகமோக்த சைவசித்தாந்த சபையின்

பிரசுரம்.

1908

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

வேலுமயிலுந் துணை.

---

அத்துவித சித்தாந்த மஹோதநதாயகரும், மாயாவாத துமஸ கோளரியும், சைவசித்தாந்த மகாசரபமுமாகிய

யாழ்ப்பாணத்து மேலைப்புலோலி

சதாவதானம்

# நா. கதிரைவேற்பிள்ளை அவர்கள்

# சரித்திரம்.



இப்பிள்ளையவர்களின் மாணவராய், சென்னை இராயப்பேட்டை

ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன சபையின்

நிருவாக சபையாருள் ஒருவருமாகிய

திரு. வி. கலியாணசுந்தர முதலியார்

எழுதியது.


சென்னை சிந்தாதிரிப்பேட்டை

ஸ்ரீவேதாகமோக்த சைவசித்தாந்த சபையார்

வெளியிட்டனர்.

---

சென்னை:

ரோகிரஸ்ஸிவ் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

---

1908.

உ

சிவமயம்.

# நூன்முகம்.

"அசிந்தியமவ்வியக்தமநந்தரூபம் சிவம்ப்ரசாந்தமம்ர்தம் ப்ரஹ்மயோநிம்! ததாதி மத்தியாந்த விஹீநமேகம் விபும்சிதாநந்தமரூபமத்புதம்! உமாஸகாயம் பரமேஸ்வரம் ப்ரபும் த்ரிலோசநம் நீலகண்டம் ப்ரசாந்தம்." எனத் தொடக்கத்தனவாக யசுர் வேதத்திற் பிரதிபாதிக்கப்பட்ட பரசிவனது சீர்மையைத் தனனகத்தே கொண்டுடைத்தாம் மேருகிரி முடிகளுள் ஒன்றாய இலங்காபுரிக்கோ ரெழின்முகமா யிலங்கும் யாழ்ப்பாணத் துதித்துச் செந்தமிழ் நாடெங்கணுஞ் சென்று புறச்சமயக் காரிருளைக் கடிந்த சித்தாந்த பானுக்களுட் சிறந்தார் கதிரைவேற் பிள்ளையவர்களாவரே. அவர் 1860 வருடத்திற் றோன்றி 1907 வருடத்திற் சரந்தனர். அப்பெருந்தகைக்குக் கண்ணிமை போன்ற கெழுதகை நண்பராய் விளங்கினார் சென்னை சிந்தாதிரிப்பேட்டை வேதாகமோக்த சைவசித்தாந்த சபையினர். அச்சபையார் பச்சிமபுலவகாணப் பாவலராங் சைவசித்தாந்த மகாசரபத்தின் சரித்திரத்தைச் சத்தியரூபமாகச் சுருக்கி வரைய அடியேற்குப் பணித்தனர். அப்பணியை மணியெனச் சிரமேற்றாங்கி யன்புற்ற என்னுள்ளத்தெழும் போவாமெனனைப் பிடர்பிடித் துந்தியது.

பிள்ளையவர்கள் வரலாற்றைச் சிறியேன் வரையத் தொடங்கியதை யுணர்ந்த அன்பர்கள் தங்கட்கு மாயாவாத தும்ஸகோளரி மனமகிழ்ந்து விடுத்த கடிதங்களிலுள்ள கமலபந்தம், இலிங்கபந்தம், இரதபந்தம், நாகபந்தம், சதுரங்கபந்தம், மயூரபந்தம் முதலிய சித்திரக்கவிகளையும், சிலேடைக் கவிகளையும், பிறகவிகளையும், சரிதத்தி னிடையிடையே யின்றியமையாத விடங்களிற் புனைக்குமாறு அனைத்தையும் எனக்கனுப்பினரேனும், அன்னோர் விழைந்தவண்ணம் யான் செய்யாது சரிதத்தையுஞ் சாலவுஞ் சுருக்கினேன். எற்றுக்கெனில் அங்ஙன மியற்றின் அத்துவித சித்தாந்த மஹோத்தாரண சரிதம் வாரிபோற் பெரிதும் விரிந்து பங்குனி மகத்திற்குள் வெளிவாரா தாகலால். அக்கவி ரத்னங்களைப் புவியுள்ள கவிஞர்கள் போற்றிப் புகழ்ந்தணியப் பின்னர் பிரசுரிப்பல்.

மதுரைத் தமிழ்ச்சங்கப் புலவராயிருந்த பிள்ளையவர்கள் பிரிவாற்றாமைக்காகப் பிரபல வித்வசிரோன்மணிகள் பாடிய பாக்களுள் வேதாகமோக்த சைவசித்தாந்த சபையார்க்குக் கிடைத்த கவிகளே இந்நூலிறுதியிற் சேர்க்கப்பட்டுள்ளன. மற்றைய கவிகளை ம-ள-ள-ஸ்ரீ, புரசை பாலசுந்தர நாயகர் வெளியிடுகின்றார் என்று கேட்டுப் பெரிதும் மகிழ்வெய்தினேன்.

அறிவினுங் கல்வியினுஞ் சிறியேனாய யான் யாத்த இச்சிறு நூலைச் சொன்னயமுடைய நன்னயப்புலவர்கள் அன்னம்போற் கொள்வார்களாக.

இங்ஙனம்:

திரு. வி. கலியாணசுந்தரன்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

கதிரைநாயகன் றுணை

---

சதாவதானம்

# ஸ்ரீலஸ்ரீ - நா. கதிரைவேற் பிள்ளையவர்கள்

# சரித்திரம்.

---

## காப்பு.

தேன்மாமணி திகழும்மலர்த் திருவாரெழின மருமன்
மான்மாமணி மருகன்சபை மருவுஞ்சிவ கதிரை
வேன்மாமணி சரிதஞ்சொல விரிநூலகத்தே
வான்மாமணி மமமாவருண் மலர்த்தாள்பணிந் திடுவோம்

## கடவுள் வாழ்த்து.

### சிவபெருமான்.

ஆனேறும் பெருமானு மரியேறுங் கரியவனு மளிக ளேறுந்
தேனேறுந் திருமலரிற் றிசையேறுஞ் சதுமுகனுர் செயல்க ளேற
மானேறுங் கரமசைய மதியேறுஞ் சடையசைய மன்றி லேறும்
வானேறுங் கடவுளர்தம் வாழ்த்தேறுஞ் சிவனடியை வணங்கு வாமால்.

### உமாதேவியார்.

எத்தேவர் செய்தொழிற்கு முதற்பொருளா யிலங்குமறை விறைவ னார்க்கும்
வித்தாகி யிருபொருளை விழைந்தளித்தப் பொருளாக விளங்குந் தேவி
சித்தாய பெருமாட்டி சிவகுகனை யுவந்தளித்த செல்வி யென்றுஞ்
சித்தாந்த வொருமுதல்வி சிவகாம சுந்தரிதாள் சிந்தை செய்வாம்.

### விநாயகர்

நாரணனு முருமாற்றி நல்லரவா யோகிருந்து நண்ண வனனனை
பூரணப்பே ருருவளித்துப் புகழருளும் புண்ணியத்தைப் புனித மிக்க
வாரணக்கே தனனனவேண்ட வனத்தன்ப நமையினம வளளித் தாயமுன
வாரணமாய வந்ததனி யத்துவித வருட்பொருளை வணங்கி வாழ்வாம்

### சுப்பிரமணியர்

ஒருமயிலை வலத்தானை யொருமயிலை யிடத்தானை யுருக்கை வேண்டு
திருமயிலை யளித்தானைச் சீரமயிலைப் பதியானைச் சிந்தை செய்வோன
றருமயிலைத் தந்தானைத் தமிழ்மயிலை வளர்த்தானைத் தளிர்த்த தோகைக்
கருமயிலை யூர்வானைக் கரமயிலைத் தரித்தானைக் கருத்துள் வைப்பாம்

### சமயாசார்ய சுவாமிகள்

சீர்பூத்த காழிநகர்ச் சிவஞான சம்பந்தர் திருத்தாள் போற்றி
கார்பூத்த கடனமிதந்த கவினுபுக ழரசர்து கழல்கள் போற்றி
போர்பூத்த விருத்தத்தொண்டத் தொகைவிரித்த பெரியவாதம் பூந்தாள் போற்றி
யோர்பூத்த மாணிக்க வாசகனு ரிணையடிக ளென்றும் போற்றி

### சந்தானாசார்ய சுவாமிகள்

சிவஞான போதஞ்செய் திருவெண்ணெய் மெய்கண்ட தேவத்தாள் போற்றி
சிவஞான சித்தியளி சித்தாந்தி யருணந்தி சிவனறாள் போற்றி
சிவஞான மறைஞான திருவாரன செயயவினைத் திருத்தாள் போற்றி
சிவஞானப் பிரகாசஞ் செழித்த உமா பதிக்குரவன செந்தாள் போற்றி

### வித்யா குரவர்

செந்தமிழ் மணியே போற்றி சிவநெறி யரசே போற்றி
யிந்தமா நிலத்தி லென்னோர்க் கெதிரிலை நடாவி னுண்மை
தந்திட வுற்ற வெந்தை சபாபதி சகனே போற்றி
கந்தவேள் சபைக்கு நாதக் கதிரைவேற் குரவ போற்றி

# நூல்.

## கதிரைவேலர் சரிதை கண்டது.

அகண்டாகார நித்த வியாபக அழற்சோதிப் பிழம்பாகிய அமலனுடன் அப்பிறறனைமையென அபேதமாயிலங்குமு அம்பிகையின் அருளமுதுண்டோன அருட்பாலகனை யணிந்தெளிருந் திருக்கோணவரையுந் திருக்கேதீச்சுரந் திகழப்பெற்றதாய, சிங்காரவேலர் துங்கக்கோயிலக ளெங்கணு

ழ்த்தாய்க்குத் தலைமகனு யிலங்கினர். அவ்வகராதியின் அருமையைப் "பூவி லிடை கடையாதி யெழுத்தின்முன்பே ருறப்பதித்த புத்தகங்கள் - யாவு மிடை கடையெனவே யாழ்ப்பாணப் புலோலிநக ரினின்மா சீர்த்தி - பாவு புதுச் சந்நிதியா னருட்கதிரை வேற்புலவன் பதித்த மேன்மை-மேவுமகரா தியிதே முதலெனற் கிதன்பெயரே விளக்கு மன்றே" என்று தணிகை, சதாவதானம் பிரமஸ்ரீ - சுப்பிரமணிய ஐயரவர்கள் புகழ்ந்தமை காண்க. பிறரும் ஐபர்மொழியை மணிமெனவணிந்தனர். அதிவீரராமபாண்டியரரு ளிய கூர்மபுராணத்திற்கு உரையுங்கண்டனர் கண்டிகையணிந்த கதிரை வேலர். பின்னர்பிள்ளையவர்கள் முற்றத்துறந்த முனிவர் பெருமானும் பட் டினத்தடிகளார் புராணத்தை முன்னொருவர் முதனூற் சிந்தியாது மொழி ந்தமையால், அப்புராணத்துள் முதனூற்கு முரணுகக் கூறும் பாக்களை நீக்கி முதனூற்றழுவிப் பல்பாக்கள் பாடிச் சோதது பதிப்பித்தனர். அதி லெம்பெருந்தகை யியற்றிய செய்யுணடை கச்சியப்பமுனிவர் செய்யுண டையைக் கடுக்கும்.

## மாயாவாத மருளை மாய்த்தது.

இங்ஙனம் வண்டமிழ்க் கனியின் தண்டமிழ்ச்சுதர்களுட் டலைமை வகித்து, முன்னறத்தை மூன்றுதியற்றும் வேளாயிற் குளைநாயகர் வேளை வணங்கும் வேலை விளித்து "கந்தனைக் கருதுங் கதிரைவேலே! எமதுயாக் கை வீக்குற்ற விக்கால் நாரணனரியாக் காரணனருளிய ஆரணத்தீற்றைப் பூரணமாயுணரா நாம்பிரமமென்னும் வேம்பொத்த சோம்பர்கள் சைவநிந் தனை புரியா நிற்கின்றனர். அம்மட்டிகளின் கொட்டங் குறைப்பதுங்கட னும்"என்ன,அவ்வமுதவாக்கைச் செவிமடுத்த எஞ்சீரியர் "மறைகணிந்தனை சைவநிந்தனை பொறுமனமும்" எனனும் நந்தியெம்பெருமான் பந்த மறுக் கும் வார்த்தையைச் சிந்தித்துச் சித்தாதிரிப்பேட்டையிற் சிவனயாம் என் னுந் தீக்கரிகள் குழுவில் அரியெனப்புக்குப் பொறித்த வினுக்கட்கு அன னோர் விடையளிக்காது அவைகலைத்தனர். மற்றொருநாள் காசிவாசி - மகா வித்துவான் சித்தாந்த பீடம் ஸ்ரீலஸ்ரீ செந்திநாதசுவாமிகள் அக்கிரா சனத்தின்கீழ் பக்கதோர்சபை தக்கவர்களாற் சேர்க்கப்பட்டது. அப்பேர வையில் அத்துவிதஞ் செழிக்கவந்த அறிஞர் தருக்கநெறி பிறழாது சுருக்க மாகக்கடாவிய வினுக்கட்குச் செவ்வனிறை யிருக்காது விழித்தனர்வேதாந் திகள். அதைக்கண்ட அக்கிராசனர் முக்கணனும் முழக்கி மக்களுய்யவந்த மாதவப் பெருந்தகைக்கு "மாயாவாதநும்ச(கோளரி"யென்னும் மாண் பட்ட மளித்தனர். இலக்கிய இலக்கணத் தருக்க நூல்களில் வல்ல புல வர்களும் புலோலிப் பிறந்த புண்ணியனைப் புகழ்ந்தனர். அவ்வெற்றி யைக்கேட்ட செற்றமிலா நாயகர்க்குற்ற களிபேருவகையை யீண்டுவிரிக் கிற்பெரும்.

## ஆரணி சமத்தான வித்துவானாயது.

நாமப்பிரமமென்னும் நாகங்கட்கிடியென இலங்கிய பிள்ளையவர்களின் வெற்றியைக்கேட்ட பெறற்கரிய ஆரணியரசர் எமதாசிரியப் பெருந்தகையை யழைத்துச் சைவமணியே! நம் சமஸ்தானத்துக்குத் தாங்கள் வித்துவானாய் விளங்கவேண்டு"மெனக் களங்கமிலாவுளங் கொண்டுரைத்தனர். அங்ஙனே யவரகமகிழ "நுஞ்சமஸ்தானத்திற்கு வித்துவானாய் விளங்குவல்" என வித்தகர் விடைவிளம்பப் புளகம் போர்த்தன்ன தீர்த்தனைப் போற்றுமேந்தல் அன்றுதொட்டு அச்சமஸ்தானமடைந்து அரசன் சிறார்கட்கும், பிறர்க்கும் அந்தமிழ் இலக்கிய இலக்கணங்களை அறிவுறுத்திவந்தனர். அஃதங்ஙனமாக அவண்போந்து நித்தம் அத்துவிதமென்ப தியற்கு மாயாவாதத்தை ஓயாமற்போதித்து வாதஞ்செய் சாத்திரியாரிடம் பாத்திரமாய் வமனப்பணியும் மாயாவாத தூமசகோளரியை வாதிப்பான், மன்னன்விடுப்ப, அத்திருப்பணிக்கண் அவணிதோன்றிய எமதையர் சாத்திரியார் நாத்திகக்கொள்கையை நாத்திரைக்குளோட்டி, அன்னவர்க்கு அத்துவித இலக்கணத்தை யறிவுறுத்தினர், அஃதை நேரிற்கண்ட அரசரால் எங்குருநாதர்க்கு "அத்துவித சித்தாந்தமஹோத்தாரணர்" எனனும் அரிய பட்டம் அணியப்பட்டது.

## பூதிமாட்சி புகன்ற மேன்மை.

மாயாவாத தூமசகோளரி, ஆரணி நகரசமஸ்தான வித்துவான், அத்துவிதசித்தாந்த மஹோத்தாரணர் என்னும் பட்டங்களைப்பெற்றுப் பலபல விடங்களிலுற்றுப் பிரசங்கமாரி பொழிந்து சைவஞானப்பயிரோம்பச்செய்து வருங்கால் அவரியற்றிய சைவபூடணசந்திரிகையில், அரிமேற்றுயிலுங் கரியவன்றரித்தல் கண்டிகைகீறென்பது ஆழ்வாராதிகள் உள்ளக்கிடக்கையென்றும், அதற்குக்கரியாக "கரியமேனி மிசை வெளியநீறு சிறிதேயிடும்-பெரிய கோலத்தடங்கண்ணன் விண்ணோர் பெருமானறனை-யுரியசொல்லாலிசைமாலைக ளேத்தியுள்ளப் பெற்றேற-கரிய துண்டோவெனக் கின்று தொட்டு மினிமியென்றுமே" எனனும் பிரபந்தச்செய்யுளை மேற்கோளாகக் காட்டி மண்குறியிடையில் உண்டாயதென்றுமவரைந்ததுமுற்றிலுங் குற்றமென்று அழகியமணவாள இராமாநுஜ ஏகாங்கிபாரைத் தலைவராகக்கொண்டு வாதிக்கவெழுந்தனர் வைணவர்கள். பிள்ளைப்பெருமான் ஏகாங்கியார்க்குப் பின்னிடாது பிரமன்முறை பூதியணிந்து புண்ணிய மூர்த்தியென்ப பிரபந்தத்தி னின்றும், வண்ணவுரைகள் பண்ணிலகாட்டிப் பிரசங்கவாயிலானும், பத்திரிகை வாயிலானும் நிறுவினர்.

இவ்விவாதம் மூன்றுமதிகாலம் நீண்டது. இறுதியில் சென்னை வேணுகோபாலசுவாமி அரங்க மண்டபத்தில், அத்தியாச்சிரம பாலசரஸ்வதி **ஸ்ரீலஸ்ரீ ஞானானந்தசுவாமிகள்** அக்கிராசனத்தின் கீழ் கூட்டிய மாபெருங்

கூட்டத்தில், ஆயிரக் கணக்கான வித்துவஜனர்களின்முன் அத்துவிதசித்தாந்தி வேதாகமபுராணேதிகாசங்களையும், திருவருட்பாக்களையும், திருவாய்மொழியையுந் தழுவிக் கண்ணன் கண்ணுதலடியாரென்றும், அவர் அக்கமணியையும், அருநீற்றையும் அன்புடன் அணிந்து இன்புடனொழுகுகின்றனர் என்றுங் கனனல் விதானத்தில கள் மாரிபொழிந்தாலென்ன உபந்நியாச மாரிபொழிந்து, உண்மை யடியவர்களை யுவகைக் கடலிற்றோய்த்தனர். பின்னர் பிள்ளையவர்கள் சைவபூடண சந்திரிகையில் விட்டுணு விபூதி ருத்திராக்க தாரணரென்பதற்குப் பலபாசுரங்கள் நாலாயிரப் பிரபந்தத்திலேயே திரட்டிப் புனைத்து அதனை இரண்டாமுறை யச்சிறுத்திச் சென்னை செங்கான்கடைப் பந்தரில் மகாவித்துவான புரசை ஸ்ரீமத் பாலசுப்பிரமணிய முதலியார், எம். ஏ. அவர்களைச் சபாநாயகரா யமர்த்தி யரங்கேற்றினர். இஃதுடன் வைணவ விவாதம் முற்றுப்பெற்றது.

விண்டுமூர்த்தி விபூதி ருத்திராக்கதாரணரே யென்று நிறுவி வெற்றியுற்றபின்னா எமது பற்றிலாா பவநசிக்குஞ் செவிநிசெப் புராணத்திற்குச் சிறந்த விருத்தியுரை விளக்கினர்; தடங்கருணைப் பெருங்கடலாய யிறையுடனிரண்டறக்கலந்த அடியவர் திருச்சரிதங்களைக் கேட்போர் மனங்கனிந்துருகப் பிரசிங்கித்து வருவாராயினர். அதுகாலை யவாக்கோர் சேயுதித்துச் சேயடி சேர்ந்தது. அஃதுஞ் செவ்வே ளருளாமெனச் சிந்திதுச் சித்தார் தஞ் செழிக்கச் சிறிதுந் தளர்ந்தாரில்லை.

## ஆவினன்குடி யாத்திரை செய்தது.

அரியும், அயனும், அக்கினியும், அவனியரசியும், ஆவும், ஆதித்தனும் அருந்தவஞ்செய்து அறுசமயக்கடவுளை யருச்சித்துப் பெருதற்கரிய பெரும் பேறனை பெற்றதும், மலர்தலையுலகில் மன்னும் மரகதமயூரன் மாத்தலங்களுட்டலையாய் மருவுவதும், கலிமிக்க விக்காலத்தினுங் கண்டு தொழுவோர்க்கு வேண்டிய வரங்களையருள வல்லதூஉமாய பழநித் தலபுராணத்துக்குப் பதினைந்து தினத்தில் எம்பாவலசிகாமணி விருத்தியுரை வரைந்து பதிப்பிக்கச் செய்தனர். அஃதைப்பதித்த பி. நா. சிதம்பரமுதலியார் சிந்தித்தவண்ணம் பழநிப்பதியிலேயே வெளியிடக்கருதிச் சென்னையினின்றும் வெளிக்கிட்டனர்வேலர். அவர் ஆவினன்குடியை நாடிவருவதை யவணிருந்த அந்தணரும், அடியவர் குழாங்களும், அரசாங்க உத்தியோகத்தர்களும் அறிந்து அறிஞரை எதிர்கொண்டழைப்ப, எங்குருநாதர் அன்னவர்களுடன் பன்னிருபுயாசலப் பிரமனூர் பொன்னிறக் கோயிலைச் சென்னியுற வணங்கித் திருக்கோயிலுட் சென்று பெருமானையும், பெருமாட்டிகளையுந் தரிசித்து ஓர் நிலயத்திருந்தனர். மறுதினம் மாயாவாததும்ச கோளரியால் பழநித் தலப்புராணத்திலோர் சருக்கஞ் சித்தாந்த நயந்தோன்றப் பிரசிங்கிக்கப்பட்டது. அப்பிரசங்காமுதைச் செவிமாந்த சிவனடியார்கள் சித்தாந்தமணிக்குப்

பரிவட்டங்கட்டிச் சர்வ வாத்தியங்கள் முழக்கத்துடன் அவரைக் கிரி வலஞ்செய்வித்து, வாழ்த்தி, யோகமூர்த்தியாலயத்துக் கழைத்துச்சென்று, அறுமுகத் தண்ணலார்க்கு அருச்சனை செய்வித்தார்கள். மாதவப்பெருந் தகையும் அகத்தொளிருங் குகத்தேவைக் குனிந்து வணங்கிச் சந்நிதிவிட்டு முன்னிருந்த மந்திரத்திற் றங்கி, அடியவர் வேண்டுகோட்படி அவண் ஐந்துநாள் வதிந்து சென்னை நண்ணிச் செவ்வனே வாழ்ந்திருந்தனர்

## மதுரைத் தமிழ்ச்சங்க மாண்புலவராயதும் புத்தமதப் புன்மை விளக்கியதும்.

பழநித்தலத்திற் பரிவட்டந் தரிக்கப்பெற்ற பண்டிதர் கோமான் திரி புரமெரித்த விரிசடைக் கடவுளும், குன்றமெறிந்த வென்றி வேலரும், தவத் திறகதித்த அகத்தியனாரும், கணக்காயர் மைந்தருங் கன்னித்தமிழ் வளர்த்த மதுரைத்தமிழ்ச்சங்கப் புலவமணியாய், எப். ஏ. பி. ஏ. வகுப்புகட்குச் சோ தனைக் கர்த்தராய்த் துலங்குங்கால், தூவடியார் பலர்சேர்ந்து அவர்பால் அணைந்து "அன்புருவாய ஐய! சின்னுட்பல்பிணிச் சிற்றறிவினராய சில கோடி கணிமித்தந் திருவருளையே திருமேனியாகக்கொண்டு, திருமறைகளை யருளிய சிவபெருமானிடந் தீக்கைப்பெற்றுச் சிவஞானபோத உண்மையறி ந்து சிவமாய் விளங்குந் திருவாதவூரராதி திணசுரர்களான் விலக்கப்பட்ட புத்த விருளிற் புண்ணியக் குறைவாற் சிலர் நண்ணிப் பித்துந்தலைக்கேறிப் பத்திநெறி நில்லாது, முத்திசேர்ந்த முதியோர்களையும், அவர்க்கன்பு பூண் டொழுகும் அடியவர்களையும் எள்ளி நகையாடுகின்றனர்; அவர்கட்கு நல்ல றிவுச் சுடர்கொளுத்தி யாளவல்ல அறிஞர் தேவரீரேயன்றி வேறியாவர்" என்று விண்ணப்பித்தனர். அவ்வார்த்தைகளைக் கேட்ட ஆரணிநகர சமத் தான வித்துவான் அன்றிரவே "புத்தமதகண்டனமென்னு மோர் புனித நூலியற்றி, ஆறுதினத்துக்குள் அச்சுவிமானமேற்றி, அனல்பட்ட அத்தியை அங்கம் பூம்பாவையாக்கிய அருளற்புதம் நிகழ்ந்த திருமயிலாப்பூரிலே, பிரம மகோற்சவகாலத்திலே, பிக்ஷாடன மூர்த்தி யுற்சவத்தன்று அரங்கேற்றஞ் செய்தனர்; சென்னை இராயப்பேட்டை பௌத்த ஆச்சிரமத்தின் பாங்கர் பெரிய பாளையத்தம்மன் பெரியமண்டபத்தில் அரியதோர் உபந்நியாசமுஞ் செய்து புத்தமதத்திற் றத்துவ மின்மையை விளக்கினர்.

## வேளாளர் வருணம் விளங்க வுரைத்தது.

அடுத்ததினம் சென்னை விடுத்து இறைவன், இறைவி, இளையோன் இவர்களாற் புரக்கப்பட்ட மதுரைத்தமிழ்ச் சங்கத்துக்குச் சென்றனர். அவண் காராளரை மன்னர் பின்னரென்றும், அங்ஙனே நிகண்டு கூறுகிற தென்றும், அதனைப்புரட்டி நான்காம் வருணத்தாரென்று அச்சிட்டனர் ஆறுமுகநாவலரென்றுங்கூறும் வருணசிந்தாமணி விடயமாகப் பலப்பல விவாதசபைகள் சேர்ந்தன; அவையிற்றில், காலமெல்லாங் காமனைக்காய்

ர சோமசுந்தரனைச்சேர்ந்த சுத்தராம் ஸ்ரீலஸ்ரீ, ஆறுமுகநாவல பெருமானை யிகழ்ந்தனா உண்மை உணரார். அவ்வசை வாசகங்களைக்கேட்ட அவர் மாணவரின் மாணவராய அருந்தவப் பெருந்தகையார் அங்கயற்கண்ணம்மை மன்றல் மண்டபத்தில், வடமொழியினும் தென்மொழியினும், பிறமொழிகளினும் வல்ல சங்கப்புலவர்கள் ஏங்க "வேளாளா நானகாம் வருணத்தவரே" என்று சுமார் 6-மணிகாலம உபந்நியசித்து,வைகறை யெழுந்து வைகையில் மூழ்கி, அறுபானான்கு அருளாடல்கள் புரிந்த அழகனையும், அங்கயற்கண் ணங்கையையும் அங்கமுற வணங்கிச் சென்னைசேர்ந்தனா. சேர்ந்ததும் செயற்கரிய செய்து சித்தார்தமுதலிசேர்ந்த சேக்கிழாராதி பெரியோர்கள் திருவருளால் திருவாய்மலர்ந்தருளிய அருநூல்கட்கு முரணாக வேளாளரை வைசியரெனவகுக்கும் நூலினும், அதனைச் சிந்தியாதும், கண்ணுறாதும், பண்டிதர்கள் பாடிச் சூடிய சாத்துகவிகளினும் மலிர்துகிடர்த மாசுசளை மணிகடற் சுலவும் மாநிலவரைப்பிலுள்ள மற்றவர்கள் கண்டு மனமகிழப் பத்திரிகையிற் பிரசுரித்தனர்.

## புராணமுரைத்தும் புண்ணியமேற்றது.

அவர் கல்வியாற்றலை யறிந்த ஸ்ரீமத - பாலசுப்பிரமணிய முதலியார் எம். ஏ. திருமயிலை மகாவித்வான சண்முகம்பிள்ளை முதலிய முதியோர் விழைந்தவண்ணம் வித்தகர் வடமொழிக்கடலையும், தென்மொழிக்கடலையும் நிலைகண்டுணர்ந்த சிவஞானசுவாமிகள் மாணவருட் சிறந்த ஸ்ரீமத-கச்சியப்பமுனிவா பச்சைமயூர னருளாற்பாடிய தணிகைப் புராணத்தைத் தனபதிகள்வாழுங் கனபதியாஞ்சென்னைக் கந்தசுவா மியாலய வசந்தமண்டபத்திற் பிரதி ஆதிவாரத்திலும்,சிந்தாதிரிப்பேட்டை வேதாகமோக்த சைவசித்தாந்த சபையடியவருள் ஸ்ரீமந்-வேதாசலமுதலியார விரும்பியபடி விளங்கிழையாளருள் பெற்ற பரஞ்சோதிமுனிவர் பாடிய திருவிளையாடற் புராணத்தையும், சந்தனருளாற் கச்சியப்பசிவாசாரியசுவாமிகள் அருளிய கந்தபுராணத்தையும் முறையே புதவாரத்திலும், சனிவாரத்திலும் பிரசங்கித்து வருவாராயினர். இப்பிரசங்காமுத நறுஞ்சுவையை நுகர்ந்தோர் நூலாராய்ச்சியில் மிகுந்த நுண்ணறிவாளரே.

## அருட்பா மேன்மை அவனியில் விளக்கியது.

இவ்வண்ணம் மாயனிடும் புததவிருள் விலக்கிய சேயவிளம்பரிதியாம் மாயாவாத தும்சகோளரியின் சீர்ச் செந்தமிழுலகம பனிரைக் கண்ட போலிப்புலவர்கள் பொறாமைப் பொறாமையால் புதுச்சந்நிதியனைப் போற்றும் புலோலிப் புலவரேற்றின் புகழொளியைச் சிறுக்கப் பலச் சூழ்ச்சிகள் செய்தும், அவை பயனிலவாயின. பின்னர், பிள்ளையவர்களை யாழ்ப்பாணச் சிங்கமென்றும், சைவம் வளாக்குஞ் சம்பந்தமூர்த்தியே சம்பந்தங்கழிக்க நாகப்பர் சுதரா யுற்றனரெனறும், சோமசுந்தர நாயகர்க்குப்பின் சுத்தா

த்துவித சைவசித்தாந்தத்தைச் செழிப்போரில்லையென வாடிய எங்களுள்ளங் களிதுளும்பச் சோமனார் சென்றார் சூரியனார் தோன்றினார் என்றுலக முரைப்ப உதித்த கதிரைவேலென்றும், சைவசித்தாந்தக் கோட்டையைத் தகர்க்கவரும் புறச்சமய வீரர்களின் சிரங்களைக்கொய்யச் சைவபூடண சந்திரிகையெனும் யாளாயுததைதை நமக்களித்த நாயகரென்றும் பலவாறு போற்றிய பண்டித ரத்னங்கள் வினையைத்தான் நஞ்ச நெஞ்சினர்களாகி "சென்னையிலுள்ளார் பலர் வடலூராரை வள்ளலாகவும், அவர் பாக்களை யருட்பாவாகவுங் கொண்டுள்ளமையானும், அவரோடு நேரில்வாதித்து அவர்பாக்க ளருட்பாவாகாதென நிறுவினர் ஆறுமுகநாவலராகலானும், அவர் மாணவரின் மாணவர் அத்துவித சித்தாந்த மதோத்தாரண ராகலானும், அவர் தொகுத்த அகராதியும் அருட்பா என்பது திருமுறையே யெண அறைகின்றமையானும், விவாத சபைகள் சேர்த்து இராமலிங்கபிள்ளையையும், அவர்பாக்களையும் மருட்பிரகாசபொள்ளலென்றும், மருட்பா என்றும் மனமகிழ்ந்துரைக்கும் யாழ்ப்பாணிகளைத் தாழ்த்திக் கூறின் எதிர்வேலில்லாதுலவுங் கதிரைவேல் நம்மைக்கண்டிக்க வெழுவர். சென்னைச் செல்வர்கள் மாயாவாத தும்சகோளரிக்கு மாற்றலராய் விடுவர்கள்" என்னும் வஞ்சயோசனைகளை நெஞ்சிற்றாங்கி முல்லாவீதியில் ஓர்சபைசேர்த்து எங் குருநாதனையும், அவர் பரமாசாரியரையுந் தூடித்து, இராமலிங்கபிள்ளை பாட்டை யருட்பாவென்றும், ஐந்தாம் வேதமென்றும், அவரை ஐந்தாங் குரவரென்றும் உபந்நியசித்தினர். அக்கரப்பிழையின்றி யறைய ஆற்றவில்லா யக்களை யோர்பொருட்படுத்திக் கதிரைவேற்பிள்ளை யவர்கள் எதிர்த்தாரில்லை.பின்னர் அழுக்காறுடையார் செந்தமிழ்க்கல்வி நிரம்பப்பெற்றசித்தாந்த செல்வர்களைக்கொண்டு திருமுறைகளைத் திருவருட்பா வென்போர் தீமையிற் சிறந்தோர் என்று பிரசங்கிக்கச் செய்யின் பித்தமதமெனப் புத்த மதத்தைப்பேசிய புலோலியார் தாமதிக்காது வாதத்திற்கு வருவர் என்றுத் தேசித்து, மகாவித்வான் ஸ்ரீமத் - ஆலால சுந்தரம் பிள்ளையவர்கள் பாலேகி "சுந்தர! புறச்சமயக் களைகளை யறக்களைந்து சொல்லரிதாந் தணிகைப்புராணத்தை நல்லிசைப்புலவர் முன் ஞாயிற்றுக்கிழமைதோறும் நன்னயமாகப் பிரசிங்கித்துவரும் கதிரைவேலையே வல்லவரென்று வந்திக்கின்றார் பலர். அவரின்னுஞ் சின்னாளிவண் நிலைப்பரேல் நமது வித்துவப் பட்டங்கள் செத்துவிடு மென்பது சத்தியம். திருமுறைகளைத் திருவருட்பாவெனல் பெருமையல்ல வென்றும், வடலூரர் பாக்களையே அப்பெயரா லழைக்கப் பட வேண்டு மென்றும் தாங்கள் உபந்நியசிப்பின் கணக்கர்பாக்களைக் கறைப்பாக்களெனக் கழறுங் கதிரைவேலைத் துதிப்போரும் பிணக்குறுவர். சங்கப்புலவருந் தன்னுடுசேர்வர்" என்றியம்ப உரையாசிரியர் உற்றுநோக்கிப் "பற்றறுக்கும் நீற்றையணியும் நற்றவம் வாய்க்கப்பெற்ற இவர்களே இறையருள் கொழிக்கும் முறைகட்குக் குறைகூறத் தொடங்குவரேல், சிவநெறியாந் தவநெறியைச் சேரும் புண்ணியங் கைவரப் பெறாக்கைதவர்

கள் அருட்பாவை நிந்தியா தொழிவரோ கலியின் வலிமையே வலிமை" என்றுன்னி வந்தவர்கட்கு முகமன் மொழிந்தாற்போல "அருட்பாவி னருமையை அன்பர்களிக்க உபந்நியசிக்குதும்" என்றிசைந்து சிந்தாதிரிப்பேட்டையில் பந்மொழிக்கும் பன்னிரு முறைகளின் மேன்மைகளைப் பண்டிதர் வியக்கப் பிரசங்கித்தனர். புண்ணிய மெல்லாப் போலிப் புலவர்கள் தேவாராதி திருமுறைகளின் பெருமையையோ சுந்தரர் பேசினரன்றி வடலூரார பாக்களின் மாண்பை மனமகிழ்ந் துரைத்தாரில்லை என்று விசனித்து,

"இலகா விருளலகை போலிகலே பேசு
முலகா யதன்பா லுறாதே-பலகாலுந்
நாம்பிரமங் கண்டவாபோற் றம்மைக்கண் டாங்கதுவே
நான்பிரம மென்பவர்பா னண்ணாதே-யூன றணக்குக்
கொன்றிடுவ தெல்லாங் கொலையல்ல வென்றுகுறித்
தென்றுமற மேதெய்வ மென்றென்று-வென்றிப்
பொறையே யெனும்புத்தன் பொல்லாத புன்சொன
மறையே விரும்பி விழாதே-நிறைமேவி
வாழ்பவர்போன் மண்ணுலகின மன்னுமுரோ மம்பரித்துத
தாழ்வுநிலே யாது துகிருணகற்றி-யாழ்விக்கு
மஞ்சு மடகரு மதுமுததி யென்றுரைக்கும்
வஞ்சமணன் பாழிமருவாதே-செஞ்சொலா
லாதிமறை யோதி யதன்பயனொன் றும்மறியா
வேதியர்சொன் மெய்யெனறு மேவாதே-யாதியினம்
மூற்றதிரு நீறுஞ் சிவாலயமு முள்ளத்துச்
செற்ற புலையர்பாற் செல்லாதே-நற்றவஞ்சேர்
வேடமுடன் பூசையருண் மெய்ஞ்ஞான மல்லாத
மூடருடன் கூடி முயங்காதே-நீட
வழித்துப் பிறப்ப தறியா தரணைப்
பழித்துத் திரிபவரைப் பாராதே."

என்று பெற்றான் சாம்பானுக்கும், முள்ளிச்செடிக்கும முத்தியருளிய உமாபதி சிவாசாரிய சுவாமிகள் அருமைத திருவாக்கை யொருபொழுது மோராது மாயாவாதிகள், வைணவர்கள், புத்தர்கள், வேளாளரை வைசிய ரென்போர் ஆகிய இன்னவர்களுடன் கலந்து, பன்னிருமுறைகளையும், பரமாசாரிய சுவாமிகளையும், நாவலர் பெருமானையும் நூடித்தனர்.

சைவத்தினமேற் சமயம் வேறில்லையென றும், அச்சமயாசாரிய சுவாமிகளே ஜெகத்குருககளென்றும், அவர்களருளிய பாக்களே திருவருட்பா என்றும் பிரசங்கவாயிலானும, பத்திரிகைவாயிலானும், புத்தகவாயிலானும் கரதலாமலகம்போற் காட்டிய வைதிகசைவ சித்தாந்த சண்டமாருதம் ஸ்ரீலஸ்ரீ சோமசுநதர நாயகரவர்களாற் றாபிக்கப்பட்ட சென்னை சிந்தா

திரிப்பட்டை வேதாகமோக்த சைவசித்தாந்த சபையார் அருட்பா நிந்தையைக் கேட்டுச் சகியாது புலவரேற்றை யடைந்து "நஞ்சபைத் தாபகருந் தலைவருமாய நாயகரவர்கள் நம்பண்டி நல்கிய பின்னர் நாவலமணியாய தங்களையே தலைவராகக் கொண்டுள்ளோம், சென்னைக் கணுள்ள சிலர் முன்னிரு வினைப்பால பன்னிரு முறைகளைப் பண்டைக் காலந்தொடங்கிப் பரனடியார்களான் வழங்கப்பட்டு வரூஉந் திருவருட்பா என்னும் பெயரா லழைப்பது பாவமென்பப் பகர்ந்து பாவப்பத்திரிகாள் கின்றனர். கற்றோர் அல்லாத மற்றையோர் அவர்தம் பொய்யுரைகளை மெய்யெனக் கொள்ளா வண்ணம் திருமுறைக்குத் திருவருட்பா என்னுந் திருப்பெயர் தொன்று தொட்டு ஆன்றோர்களான் வழங்கப்பட்டு வருகிறதைப் போதித்தல் வேண்டு" மென வேண்டினர். அடியார்க் கெளியவன் அடியைப் பேற்றும் மிடியில்லார் சபையாரை நோக்கி "யங்ஙனே செய்வல்" லென்னுமரிய விடையளித்து அன்று தொட்டு அருட்பா என்பது திருமுறையே யென்றும், மருட்பா என்பது முக்குண வயத்தான் முறைமறாத்தறையும் இக்காலப் புலவர்பாக்களே யென்றும் பசுமரத்தாணி போற் பாருகண்டத்தி னூட்ட விர்த்துக் கொண்டனர் சிதாகிரிப்பட்டை யினும், பிறவிடங்களினும் கூடிய விவாத சபைகடோறுஞ் சென்று நற்பலத்தொடு பெற்றமூதியே அருட்பிரகாச வள்ளலென்றும், நாழியினுள்ளே னிக கணக்கிலாச் சிவரைக் கரையேறிய கவுணியப் பெருமானாதி கருணைவள்ளல்கள் திருவாய் மலர்ந்தருளிய திருமுறைகளே திருவருட்பாவென்றும், இராமலிங்க பிள்ளை யருட்பிரகாச வள்ளலாகா ரென்றும், அவர் பாக்கள் அருட்பா ஆகா வென்றும் ஆரண ஆகம அருநூல்களையும், மற்றைய தெய்வீக சாத்திரங்களையுங் காட்டிச் சாதித்தனர். அவ்வுபந்நியாச அமுதைச் செவிமடுத்துப் புண்ணியர் இன்புற்றார் பூரியர் துன்புற்றார் ஸ்ரீமத்-ஆலாலசுந்தரம்பிள்ளை யவர்களும் அருட்பா வென்பது திருமுறையே யென்று அகமலர்ச்சியுடனும், முகமலர்ச்சியுடனும் அன்பர்கட்குப் போதிக்கத் தொடங்கி ஆரணி நகர் சமத்தான வித்துவானிடம் கெழுதகை நட்புப் பாராட்டினர்

ஆலாலசுந்தரம்பிள்ளை யவர்களும் மகாசிரியர்பக்கல் நண்ணியதைக் கண்ட ஆலமனைய வன்னெஞ்சர்கள் வடலூர்ப்பிள்ளையை வள்ளலென்றும், அவர் பாக்களை யருட்பா வென்றும் நாட்ட வேண்டுமென வெழுந்த நோக்கத்தை யறவே யொழித்துக் கதிரைவேற்பிள்ளை யவர்கட்கு இன்னல் விளைக்கத் தொடங்கின. பன்னிரு புயாசலங்களையுடைய பகவனுரைச் சென்னியுற வணங்கிச் செந்தமிழ்மாலை சாத்தும் சிரியர்க்குப் பூரியர்கள் புரியும் புன்குறும்புச் செயல்கள் என்செய்யுமோ? அவைகள் பரிதிமுற்பட்ட பனியெனப் பறந்தன. இங்கு ஆணித்த சங்கரனருளாற் றெய்வத் திருவாளர்கள் திருவாய்மலர்ந்தருளிய திருமுறைகளே திருவருட்பா வென்றும் மற்றையோர் பாக்கள் மருட்பா வென்றும் பெருஞ் சங்கங்களிற் சென்று அருஞ்சங்கப் புலவர் செய்த உபந்நியாசச் சாரங்களைப் பின்வருவார்க்குபகரிப்பானுன்னி

வேதாக மோகத சபையார்கள் அவையிறைந்த திட்டு அச்சுவிமானமே றிப் புத்தகமாக்கி அதற்கு இராமலிங்க பிள்ளை பாடல் ஆபாசதர்ப்பணம் அல்லது மருட்பா மறுப்பு என்னும் எழிலும் மீது, உலகனைத்து மாகியப் புன்னையின் கீழ்ச் சென்னியாறுடையானைச் சென்னியுறத் தாழ்ந்து ஏத் தித்து வந்தித்து வழிபட்டுப் பெற்ற மயிலையம்பதியிலே, கபாலீச்சரத்திற் கெதிரிலே சித்தாந்த மந்திரம் என்னும் இருக்கையிலே கதிரைவேற்பிள்ளை யவர்களைக் கொண்டு அரங்கேற்றிப் பிரசுரித்தனர்.

மருட்பா மறுப்பைக்கண்ட மக்களுள் மாதேவன் மலரடியையென்றும் மனந்தாங்கி, மறைபாகமவழி நிற்கும் மேதாவிகள் ஆனந்த வாரிதியிலாழ்ந் தனர். பூர்வபக்கிகள் "கிணறு வெட்டப் போய பூதம் புறப்பட்டாற்போல" யாழ்ப்பாணத்தானைத் தாழ்த்தவேண்டி யாங்காதலிப்ப இராமலிங்கபிள்ளை பாடல் ஆபாசங்கள் வெளியாயினவே. இவ்வண்ணம் நிகழுமெனக் கனவி லுங் கருதவில்லையே, நாம் ஒன்றுன்ன நாயன் ஒன்று நினைத்தனனே, என் செய்வது என ஏங்கி யேங்கி யேற்றும் ஆகுலக்கடலில் ஆழ்ந்தனர்.

'சும்மாவிருந்த சங்கை ஊதிக்கெடுத்தா னாண்டி' என்றாற்போல வாளா விருந்த வண்டமிழ்க் கதிரைவேலை வலிய வாதத்திற்கழைத்து, வடலூரார் மாண்பையும், அவர் பாக்களின் அபிவிருத்தியையும் அழித்தனரே பாவி கள் என்றும், சென்னைப் புலவர்கட்கும், பிறர்க்கும் புலோலிப்புலவன் புகழைக் கெடுக்கக் கருத்துண்டேல் இராமலிங்க பாடலை யெற்றிற்கோ இடையி லிழுக்க வேண்டுமென்றும், இராமலிங்கபிள்ளை பாடல் ஆபா சம் வெளிவந்ததற்குக் காரணர்கள் சென்னைப் புலவர்களே என்றும், கலியுகத்திலிவர்கள் கலியாண நாடகக் கதிரைவேலை வலிந்தழைத்த மையாலன்றோ பன்னிரு திருமுறைகளின் மேன்மை பாரெங்க ணும் பரவியது, யாவும் இறையருளேயாகும் என்றும், பலர் பலவிதமாகப் பகர்ந்தனர். சுமார் முப்பத்திறைந்து வருடத்துக்கு முன்னர் வடலூ ரில் நடந்தேறிய விடயங்களை இக்காலத்தில் மெய்ப்பித்தல் மிகக் கடின மென்றும், வழக்கெடுப்பின் பிள்ளையை வள்ளலென்போர் மீளா நரகத்திற் காளாவரென்று கரையுங் கதிரைவேலர் பயந்து கடன் மதியிலுள்ள தன்னுடேகுவர், அல்லது பிள்ளையை வள்ளலென்றும் அவர் பாக்களை யருட் பா என்றும் ஒத்துக்கொள்வர் என்று யோசித்து விளம்பினர் வேறுசிலர். மருட்பா மறுப்பில் 27-விடயங்கள் பொய்யாக வரையப்பட்டுள்ளன என்று 1904-ஆம் ஜூனில் சென்னை டவுன்போலீஸ் கோர்ட்டில் இராமலிங்கம் பிள்ளை தமையன் தனயராய வடிவேற்பிள்ளை யவர்களால் வழக்குத்தொடுக் கப்பட்டது. காலண்டர் நம்பர் 24533-1904. சென்னை ஹைகோர்ட் வர் சால் நியாயதுரந்தர சிங்கங்களாகிய பிரமஸ்ரீ வி விசுவநாதசாஸ்திரியார் B A, B L, அவர்களும், பிரமஸ்ரீ சாமராவ் B A, B I, அவ் களும் கலியிற் திருமுறையி னுண்மையை வலியுறுத்த வந்த பெருந்தகைக்காக வாதிப் பான் நீதிபதிமுன்னர் நின்று 27 விடயங்களுள் 20 விடயங்கள் இராமலிங்

கர் பாக்களில் வெள்ளிடை மலைபோல்விளங்குவதைக் காட்டினர்கள். எஞ்சிய ஏழும் போலியருட்பா மறுப்பு, குதர்க்காரணிய நாச மகாபரசு கண்டனம், இராமலிங்கம் பிள்ளை படிற்றொழுக்கம், முக்குணவயத்தான் முறை மறந்தறைதல், தத்துவபோதினி, தத்துவவிவேசினி, தத்துவவிசாரணி, தினவர்த்தமானி, சுகிர்தவசனி, ஞானபானு, நேட்டிவ்பப்ளிக் ஒபினியன், அற்புதப்பத்திரிகை, வர்த்தமானவிமிர்சனி, திராவிடப்பிரகாசிகை, பாலசரித்திரதீபம், முதலிய புத்தகங்களையும், பத்திரிகைகளையும், விளம்பரங்களையும் கொண்டு, வடலூர்மேட்டுக் குப்பத்திற்குச் சென்று இராமலிங்கர் செய்கைகளை நேரிற்கண்ட சீரியர்களைக் கொண்டும் நிரூபிக்கப்பட்டன. அவ்வழக்கைச் சுமார் ஆறுமாதகாலம் விசாரித்த நீதிபதி கனம் - அஜீஜுடின்சாயபு பஹதூர் அவர்கள் 1904-ஆடு நவம்பர்மீ 21உ ஆகியகார்த்திகைச் சோமவாரப் புண்ணியத்தினத்தன்று தள்ளிவிட்டனர். அந்நியாயாதிபதியவர்களால் எங்குருநாதற்கு மாயாவாத தும்ஸகோளரி என்ற பட்டம் உறுதிப்படுத்தப்பட்டது. அவ்வெற்றியைக் கேட்ட கற்றறிந்த நற்றவர்கள் வரம்பிலா இறும்பூதெய்தினர். சிவனேகதி யவனே பதியெனக் கொண்டு சைவம் வளர்த்த சிவஞான சம்பந்தராதி திருவருட்செல்வர்கள் செம்மலர்த்தாளை நம்பிய ஸ்ரீமதானந்த முத்துக்குமாரசுவாமி பக்தஜன சபையாரும், சைவசித்தாந்த சங்கத்தாரும், சைவசமய பக்தஜன சபையாரும் ஒருங்குசேர்ந்து ஸ்ரீமுத்துக்குமாரசாமியார் நற்றிருக்கோயிலிலே 1904ஆடு நவம்பர்மீ 27உ ஞாயிற்றுக்கிழமை எந்தையாங் கந்தவேட்கும், பரமாசாரிய சுவாமிகட்கும் அபிடேக அலங்கார ஆராதனஞ்செய்து, அருட்பாக்களையும் அன்புடன் பூசித்து, அழகிய விமானத்தி லெழுந்தருளுவித்து, திருவீதி வலஞ்செய்வித்து, அரசாங்கமேறி அருட்பாவினுண்மை விரித்த அத்துவித சித்தாந்த மதோத்தாரணரைக் கொண்டு "திருமுறைகளின் மாண்மையதனைப் பிரசங்கிக்கச் செய்விததுப் பெருதற்கரிய பெரும்பேற்றை யிம்மையிலே யடைந்தனர்கள். அடுத்த ஆதிவாரம் எமது ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜனசபையின் பிரதம வருடோற்சவத்தன்று, சுந்தரேசப்பெருமானார் திருவாலயத்தினின்றும் அடியேம் ஆசிரியரை யெதிர்கொண்டழைப்பக் கதிரைவேற் பெருந்தகையுங் கடையேமை யொருபொருட்படுததி யெங்களுடன் அளவளாவி சபைநிலயமடைந்து, அ ாசனம்வகித்து வருடோற்சவத்தைப் பெருமைபாய் நடத்தினர். சபைக்காரியதரிசியும், எமதுதமயனாரும் ஆகிய திரு. வி. உலகநாத முதலியாரவாகள இயற்றிய திருவருட்பா விஜயநாமாவளி சிவனடியார்க்கு விநியோகிக்கப்பட்டது. புரசைப் பரசிவ தமிழ்வேதபாராயண பக்தஜன சபையாரும் 1904ஆடு டிசம்பர்மீ 18உ பானுவாரம் ஸ்ரீகங்காதரேசுரர்க்கும், பங்கசாட்சி யம்மையார்க்கும், பரமாசிரிய சுவாமிகட்கும் மகாபிடேக அலங்காரமாதி நடத்திப் புண்ணியத் திருவருட்பாக்களைப் புட்பச்சிவிகையில் எழுந்தருளுவித்துத் திருவீதிமகோற்சவம் நடாத்தினர்,

இங்ஙனஞ் சென்னைச் சிவனடியார் திருக்கூழாங்கள் பன்னிருமுறை கட்கும் பததியாயுற்சவஞ்செய்து பரமானந்தராய்ச்செய்த வந்தனோபசாரங் களையும், பரிசுகளையும் ஏற்றஎங்குருநாதர் அருட்காமக்கொடியின் அங்கயற் கண்கள் களிக்கப் பாதந்தூக்கிப் பாசத்தாற் கட்டுண்டுழலும் பசுக்கள்வீடே றப் பரமன் பஞ்சகிருத்திய நடம்புரியுஞ் சிதம்பரததிற்கு ஆரோத்திராதரி சனததிற்குச் சென்றனர். தில்லைவாழ் அந்தணர் பெருமானகளும், திருமட த்துத் தம்பிரான் சுவாமிகளும், தேவாரபாடசாலை ஓதுவார் மூர்த்திகளும், திருவாதிரைத் தரிசினத்திற்காக வந்திருந்த சிவனடியார்களும், சிவஞான தீபத்தைக்கண்டு, அகங்குளிர்ந்து, முகமலர்ந்தனர். அவ்வாண்டு, ஆரோத் திராதரிசினத்திற்கு அடுத்ததினமாகிய (24-12-01.) ஆதிவாரம ஸ்ரீசமயா சாரியசுவாமிகட்கு அபிடேக அலஙகார ஆராதனைகள்செய்து, அமபலப் பாக்களாம் அருட்பாக்களை யனபுடன் பூசித்து, அரசுவாவாகிய அத்தியின் மீது எழுந்தருளப்பண்ணி, கொடி, குடை, சாமரமாதி சாலோபசாரங்க ளுடன் புறப்பட்டு, இருமராழித திருவருட்பாக் கோலத்தோடு மாடவீதி திருவுலாவந்து, திருமுறைகளைக் கழுத்தினினறும, ஹரநாமகோஷமுங் கர தாள கோஷமுந் திசைகடோறுஞ் செவிடுபடச் சிறாக விரக்கி, அரசசபை யாம் ஆயிரக்கால மண்டபத்தில் வீற்றிருக்கச் செய்தனர். அத்தியின் மீனே னா அஞ்செழுத்தோதி வந்த அததுவித சித்தாந்தமதோததாரணரை அன் பர்கள் இன்புறுமாறு அருட்பாவுண்மையை அம்மண்டபத்தி ஒபங்கியசு க்க அந்தணசிகாமணிகள் ஆஞ்ஞாபிக்க, அவரும்அனனவர் ஆணையைச் சிர மேற்றாங்கி அருணுதன் மகாமண்டபததில் சுமார 8,000 அனபாகள் மத்தி யில் அருட்பாவுண்மையை யுபந்நியசிததனர். திருமுறையுற்சவஞ் செய்த பெருமறையோர்களால் எம்பிராற்குப் பூமாலை சூடப்பட்டுப் பட்டுப்பரி வட்டமுஞ் சாததப்பட்டது.

அவ்வருமையைக் கண்ட பெருமையிற் சிறந்த நாட்டுக்கோட்டைச் செட்டிமாாகள் தஙகள் தேவையம்பதிக்குச் சிததாந்தமணியை யழைத துச் சென்று, ஸ்ரீமீனாக்ஷிசுந்தரேசப்பெருமானார் ஆலயததிலே, திருமுறை கட்குத் தில்லையம்பதியில் செய்தவண்ணம மகோற்சவஞ் செய்தாாகள். அன்றிரவு வென்றிவேற் போற்றும் பிள்ளையவாகளால் வள்ளலருண்மணக் குந் திருமுறை மேன்மை யுபந்நியசிக்கப்பட்டது. இறுதியில் மாயாவாத தும்சகோளரிக்கு மாலைசாத்திப் பட்டுப்பரிவட்டந்தரிதது மாலையொழித்த னா வணிகமாக்கள். அவையிற்றை அகமகிழ்ந்து குகனடியுன்னியேற்றுச சென்னை யடைந்தனா செங்காப்புலவர்.

தொண்டைநாட்டுச் சிவதலஙகளுட் சிறந்த திருக்காஞ்சிச் சிவநேசத திருக்கூட்டத்தாரும் சிதம்பரததில் இரண்டாமுறைநடந்தேறிய திருவரு ட்பா வுற்சவம்போல், திருவேகம்பத்திலும் நடத்தவேண்டுமென விழை ந்து, நங்குருபாலணைந்து, "நம்பனருளால் நாகப்பர்தவத்து தித்தநாயகமே!

இக்காலத்துமக்களும் இனிவருவோரும் இன்புற்றுய்ய உண்மையருட்டாக்கள் திருமுறைகளே என்று, அரசமன்றமேறி யறிவித்த ஆண்டகையே! செம்மறையோர் அம்பலத்தில் அருட்பாவுற்சவஞ் செய்து ஆனந்தமடைந்ததற்குக் காரணராயிருந்த கதிரைவேலரசே! அடியேம் அருட்பாவெற்றியைக் குறித்துத் திருக்காஞ்சியில் மகோற்சவம் நிகழ்த்த மகிழ்ந்துள்ளேம், மாதவப்பெருந்தகை யாண்டெழுந்தருள வேண்டுமென வேண்டினர். வேண்டும் அடியவர்கட்கு வேண்டியவரங்க ளுதவும் ஆண்டவனை வழிபடுந் தாளாண்மை மிக்கவேளாளமணியும் அவர் வேண்டுகோட்கிணங்கி அயனு றியோர்வாழும் அந்நகாஞ்சியை யணைந்தனர். கதிரைவேற் பெருமான் காதன்மேலிட்டால் காஞ்சிக்கு வருவதைக்கேட்ட கறைகண்டனடியார் கரையிலா இறும்பூதெய்தித் தெருக்கடோறும் பூம்பந்தர்களும், தோரணங்களும் நாட்டி வழிபார்த்திருந்தனர் அவ்வீதிகடோறும் அன்பர்கள் அகமகிழ்ச்சென்று, அன்னவர்கள் பானுவைக்கண்ட பங்கயமென முகமலர்ந்து செய்த வந்தனோபசாரங்களையேற்று ஓர் அன்பர்நிலயமடைந்தனர். அடுத்த நாள் (22-1-05) திருக்கூட்டத்தார் ஏகாம்பரப்பெருமானார் ஆலயத்திலே சமயாசாரிய சுவாமிகட்கும், சேக்கிழார் பெருமானுக்கும் அபிடேக அலங்காரஞ் செய்து, அருட்பாக்களை யருச்சித்து ஆலய அரசுவாமீது ஆரோகணிக்கச் செய்தனர் யானையுர, குமரகோட்டத்துக்கஜமும், ஸ்ரீவரதராஜப்பெருமாள் வேழமும் வெண்சாமரம்வீச இராசவீதிநோக்கி நடந்தது. அந்தணர் வேதவொலியும், அருந்தவர்கள் அருட்பாவொலியும், அதர்வேட்டுகளின் முழக்கமும், வாத்தியகோஷமும் திசைகளைச் செவிடுபடுத்தின. அவ்வுற்சவத் திருக்கோலத்திலே அன்பர்கள் மத்தியில் என்பணிந்த இறைவனேயென இலங்கினர் எங்குருநாதர். இராசவீதியிலே இருகாலும் திருமுறைகளை முறைப்படி பாராயணஞ்செய்யும் பலப்பல பக்தஜனசபையார்கள் தத்தஞ்சபைக்கெதிராகத் தந்திவந்தபோது, செந்தமிழ்வேத பாராயணத்துடன் யானையை வலம்வந்து பழம்பாணப் பெருவாழ்விற்குப் பூமாலைகள் சாத்தி நண்ணரிதாம் புண்ணியத்தைக் கண்ணிமைப்பொழுதில் கைவரப்பெற்றன. இவ்வண்ணம் பெருங்கோஷ்டிகளுடன் வருங்கஜங்கள் ஆயிரக்கான்மண்டபத்தை யண்மின அந்தணர்கள் அருட்பாவை அத்தியினின்றும் பத்தியுடனிறக்கிச் சபாமண்டபத்தில் வீற்றிருக்கச்செய்தனர். கதிரைவேற்பெருந்தகையைக் கண்டறியாத எண்ணிறந்த புண்ணியர்கள் ஆங்கே நண்ணிக் கதிரைவேற்பிள்ளை யாவர் யாவரென்று ஒருவரையொருவர் வினவிய ஒலியே யெங்குமலிந்து நின்றது. அதுகாலை ஆரியம் வல்ல வீரியர் ஓருயர்ந்த பீடத்தின்மீதேறிச் சிவநாமசங்கீர்த்தன முழக்க, அன்பர்களுங் கண்ணுறக்கண்டு துன்பொழிந்தார்கள். உடனே அருட்பா மான்மியம் ஆசிரியரால் உபந்நியசிக்கப்பட்டது உற்சவம்செய்து உற்சாகமெய்திய உண்மைச் சிவநேயர்களால் இராமலிங்க பிள்ளைபாடல் ஆபாச தர்ப்பணவிஜய மகாசரபம் முதலிய புத்தகங்கள் பத்தர்கட்கு விநியோ

இக்கப்பட்டன. ஞாபகசின்னத்திற்காக நாகப்பர் சுதாகரு அரங்கம் பதித்த கௌரிசங்கர கண்டி யளிக்கப்பட்டது. உறையூர் சைவசித்தாந்த சபையாரும் யாழ்ப்பாணத்துப் பக்கத்திராம வாசரைத் தம்மூராக்கழைத்துச் சென்று உண்மை யருட்பாக்கட்கு மேற்குறித்த வண்ணம் உரைவகுஞ் செய்து, பிள்ளை யவர்கட்குச் சன்மானஞ் செய்தனர். திருவருட்பாவிளக்கம் என்னுமோர் பிரபந்தமும் இயற்றிப்புனிதராகக் குபகரிக்கப்பட்டது. திருவண்ணாமலை, சீகாழி முதலிய தலங்களுக்குச் சுவாமி தரிசனத்திற்காகப் பரிசனங்களுடன் ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜனசபைத்தாபகர் சென்றகாலையில் ஆங்காங்கே அன்பர்கள் அருட்பா வுற்சவஞ்செய்து அருந்தவமணியை வாழ்த்தினார்கள் சென்ற பிரயாணஞ்செய்து வந்தனைகளேற்றுச் செந்நாப்புலவர் சென்னை சேர்ந்து கந்தசுவாமி யார் வசந்தமண்டபத்தில் தணிகைப்புராணமும், சிந்தாதிரிப்பேட்டையில் கந்தபுராணமும் திருவிளையாடற்புராணமும் பிரசங்கித்துவந்தனர்.

அநபாயச் சோழமகாராசன் மெய்ந் அருட்பா வுற்சவப் பெருங்கோலத்தை யிக்காலத்துள்ள மக்கட்குக் காட்டி யிணையிலாப் பெருமகிழ்ச்சி யெய்துவித்த பெரியாரைப் பெற்றோரும், உற்றோரும், சுற்றத்தாரும், பிறரும் சுதேசத்திற்கு வருமாறு திருமுகங்கள் விடுத்தனர். அவையிறைச் சென்னை நேயர்கட்குக் காட்டிச் "சென்னை நமைப் பிரியாது, ஏத்துவோர்க்கு எந்நிதியு மளிக்கும் சாந்நித்தியமுள்ள புரிசட்டான பூமேலிக்குச் சென்று மீளுவல்" எனவிசைத்து அன்னவர்கள்பால் விடைபெற்று, அருந்தி யிணைய கற்பரசியாருடனும், புதல்வர்களுடனும் புறப்பட்டனர். இடையில் விடையவராமே சிதம்பரம், சீகாழி, புள்ளிருக்கு வேளூர், திருக்கோலக்கா, திருச்செங்கோடு திருமயிலாடுதுறை, திருவாலவாய், திருநெல்வேலி, இராமேச்சுரம் முதலிய திருப்பதிகளிற் றங்கி யாங்காங்கே யுள்ள தீர்த்தங்களில் தோய்ந்து, மூர்த்திகளைக் கண்டு வணங்கி, அடியவர்கள் அன்பின்மேலிட்டாற் செய்பணிகளை மனமுவந் தேற்று, அவர்கள் அகமகிழ்ந்து விழைந்த வண்ணம் அத்துவித சித்தாந்த மகோபந்நியாச மாரியைப் பிரமமேகம்போற் பொழிந்து, வீறுசால் நகரையடைந்தனர். அந்தணரைக் கண்ட அந்தணர்களும், ஆசிரியர்களும், அன்பர்களும் அருட்பா முழக்கத்துடன் எதிர்வரக் கதிரைவேலரும் கண்ணுதலுஞ் சங்கீர்த்தனஞ் செய்து, அவர்களுடன் கலந்து, அவர் உபாசனா மூர்த்தியாம் உபயக்கிராமப் பெருமான் அருட்கோயிலுட் சென்று உமைமகனை யுள்ளத்திருத்தி வணங்கித் தந்தையார் மாதிரமடைந்தனர். பல்பலச் சைவசித்தாந்தத் திருக்கூட்டத்தினர்கள் தத்தங்கோட்டங்கட்குத் தாளாண்மை மிக்க வேளாளரை யுபசரித்துட அழைத்துத் திருவருட்பா வுற்சவங்கள் செய்து தீமையொழித்தார்கள். பற்பல இடங்களில் மாயாவாத துமஸகோளரியைக் கொண்டு உபந்நியாசங்கள் செய்வித்தார்கள். அவ்வுபந்நியாசங்களைக் கேட்ட எங்குருநாதரின் குருநாதர்களே "எமதாசிரியப் பெருந்தகையாம் நாவலர்பெரு

மான பிரசங்கமுறைச் சுமார் நாற்பது ஆண்டுகளாகச் செவிமடுக்காது வாடிய எங்கட்கு இற்றையதினம் அஃதை யுபகரித்த தடங்கருணைப் பெருங்கடலாய சங்கரனருளை யென்னென்ன வியக்க வல்லேம்' என்று மகிழ்ந்து வியந்து புகழ்ந்தனரெனின், ஏனைய புலவர்கள் புகழ்ந்தமையை நீண்டுவிரிக்கவும் வேண்டுமோ? "போலியருட்பாப் பிரபந்த நிர்க்கந்த கிஞ்சுக கண்டனப் பிரசண்டமாருதம்," "சைவசித்தாந்த மகாசரபம்" என்னும் அரியபட்டங்கள் பெரியோர்களாற் சூட்டப்பட்டன.

இணையில்லாப் புலவர் பெருமான் ழநாட்டில் வாழுங்கால், வடிவேற்பிள்ளை போலீஸ் நியாயாதிபதி புகன்றசாயபு பிழையுள்ளதென்று சென்னை ஹைகோர்ட்டில் அப்பீல் எடுத்தனர். அக்காலப் பத்திரிகைகளானும், கெழுதகை நண்பர்கள் விடுத்த கடிதங்களாலும் அறிந்து சென்னைசேர யுன்னினர். திடீரென்று விசாரணை தொடங்கினர் அரசாங்கத்து நியாயாதிபதிகளாய கனம் பென்ஸன் துரை யவர்களும், கனம் மூர் துரை யவர்களும். வேதாகமோக்த சைவசித்தாந்த சபையார் பிரமஸ்ரீ வி. கிருஷ்ணசாமி ஐயரவர்களையும், பிரமஸ்ரீ விஸ்வநாதசாஸ்திரி யவர்களையும் கொண்டு வாதிக்க, சென்னைப் போலீஸ் கோர்ட் தீர்மானம் குற்றமற்றதென்று (21-11-05) வழக்கைத் தள்ளிவிட்டனர் நீதிபதிகள். சபையார் உடனே தமது சபாநாயகர்க்குத் தந்தியடித்தனர். இவ்விரண்டாமுறை வெற்றியைக் கேட்ட சிலர் 'கதிரைவேலர் காட்டிலிருந்தாலென்னை? நாட்டிலிருந்தாலென்னை? வீட்டிலிருந்தாலென்னை? இவ்வழக்கிற் கவரோ முன்னிலைச் சுட்டேயன்றி மூலகாரணரல்லர், முழுமுதற் பொருளே இவ்வழக்கிற்குப் பிரதிவாதி' என்றுள்ளமெழுங் காதன் மீதிட்டோங்க மொழிந்தனர். ஹைகோர்ட்டினும் வெற்றிபெற்றதைப் பரிந்து கொற்றவர் சமயாசாரியசுவாமிகள் திருவருளை யுன்னியுன்னி ஆனந்த வுருவராயினர். சென்னைச் சிவனடியார்களைக் காண்பம்போவாகக்கொண்டு ழநாடு விடுத்துத் திருவாவடுதுறை யடைந்து விடையவனை வணங்கித் திருமாளிகையில் ஸ்ரீபண்டார சந்நிதிகள் விழைந்தபடி "சந்தானபரம்பரை" யென்னும் அரிய விடயத்தை யுபந்நியசித்துப் பரிசும்பெற்றுச் சத்மபாமடைந்து ஞ்சு - பலபிணிச் சிற்றறிவினர்களுய்வான கற்றைச் சடையப்பெருமையாக் காலதூக்கிக் கருணைநடஞ் செய்யும் பெருவாழ்வைக்கண்டு தரிசித்துப் பன்முறை வணங்கிச் சென்னை நண்ணினர். பானுவைக் கண்ட பங்கயம்போல் பன்னிருதிருமுறை சபையினர் முதலியோர் முகங்கள் மலர்ந்தன.

## வாடாவஞ்சியில் வாழ்ந்த சிறப்பு.

உடல்பொருளாவி மூன்றையும் உத்தமச் சித்தாந்த சைவத்திற்காக ஆட்பணஞ்செய்த அத்துவித சித்தாந்த மஹோத்தாரண கந்தநாதன் செந்தாமரை மலரை யல்லும்பகலும் சிந்தையிலிருத்திப் பழைய வைதிக சைவப்பிர

சங்கங்கள் பலச்செய்து கொண்டு வாழ்வாராயினர். கதிரைவேலுவலர் அங்ஙனம் வாழுங்கால் கடைச்சங்கத்தி லரங்கேற்றப்பட்ட சிலப்பதிகாரத்தைச் செய்த இளங்கோவடிகள், அச்சங்கப் புலவராயிருந்து கவியரங்கேற்றிய கோவூர்க்கிழார், கருவூர்க்கிழார், ஒல்காப்பெரும்புகழ் தொல்காப்பியத்திற்கோ ருரைகண்ட ஆசிரியர் சேனாவரையர் முதலிய செந்தமிழ் மணிகள் வதிந்த வாடாவஞ்சியாங் கருவூரிலே கனம் கிளைடன் (Rev. Clyton) துரையவர்கட்கோர் தமிழ்ப்பண்டிதர் வேண்டியதாயிருந்ததை யறிந்து, அத்துரையவர்கட்கு விண்ணப்பப்பத்திர மனுப்பினர். அஃது துரையவர்களால் அங்கீகரிக்கப்பட்டது. சென்னைச் சிவநேயர்கட்குப் பலதேறுதல்கள்கூறிக் காரிகையுடனுங் கன்னியுடனுங் கருவூரையடைந்தனர். மூன்றுமதிக்குள் மெதுசபை யிரண்டாம் வருடோற்சவம் நெருங்க அவ்வுற்சவத்தை யுற்சாகமாய் நடத்த அவணின்று சென்னையணைந்து பன்னிருகரர்தோன் பக்தஜனசபையின் வருடோற்சவத்தையினிதுநடாத்தி எறிபத்தர் வாழ்ந்த எழிலூர்க்கு மீண்டனர். உத்தியோக கால மொழிந்த மற்றகாலங்களில் தமிழ்வளர்க்கும் பெருமான் சிவஞான பாடியத்திற்குச் சிறந்த குறிப்புரைகள்வரைந்து கொண்டிருந்தனர் அஃது மன்றி சுப்பிரமணிய பராக்கிரமமென்னும் ஓரரிய நூலும் பெரியராலாக்கப்பட்டது. சிவஞான சுவாமிகள் பலஞானமழிக்கும் வியாக்கியானங்களினுண்மை கற்றோர்க்கன்றி மற்றையோர்க்குத் தெற்றெனப் புலப்படாவாகலான், அவையிற்றைத்திரட்டி யாவர்க்கும் பயன்படுமாறு எளிதான தமிழ் நடையில் தெளிவாக எழுதினர். அஃதியாவர் பாலடைந்துளதோ அறியேம்; அறுமுகனே யறிவன். வேனிற்கால விடுமுறைநாள் உறவே இல்லாளுடன் கல்லாரல்லாநல்லார்கருதுங் கதிரைவேற்பிள்ளை சென்னையடைந்து, பன்னிருதிருமுறைத் திருவருட்பாப் பாராயண பக்தஜனசபையின் பிரதம வருடோற்சவத்தைப் பெறறியாய் நடாத்தி, மருட்பாமறுப்பின் வழக்கில் அவருக்காக வாதித்த வாசாலகியாயதுரந்தர சிகாமணியாம் விசுவநாதசாத்திரியாரவர்கட்கு ஞாபகசின்னமாகச் சில சன்மானங்கள்செய்து பூவாவஞ்சியெனப் புலவர் புகழ்ந்த கருவூர்க்கேகினர்.

அத்திருப்பதிக்கணுள்ள பத்தர்குழாங்கள் பண்டித சிரோன்மணிபாலனுகி "இனிக்கருவூரா வண்ணங் கருவூரில்வதியுஞ் சண்மணியே இத்தல மான்மியத்தை யெவரும் எளிதில் தெளியுமாறு கத்தியமாகச் செய்யவேண்டு"மென வேண்டினர். அவர் வேண்டுகோளுக் கிரங்கியவேளடியார் 'கருவூர்மான்மியம்' என்னுமோர் பனுவலியற்றிப் பசுபதீச்சுரப் பெருமானார் திருக்கோயில் ஆம்பாபிடேகதினத்தி லரங்கேற்றினர். அம்மான்மியத்திற் செம்மான்மருகன் செம்மலர்த்தாளைக் கருதுங்கதிரைவேற் சழறிய கவிகள் பலவுளவேனும், அவையிற்றுள் இரண்டுசிலேடைச் செய்யுள்களைச் சிவனடியார்களிக்க எணடுக்காட்டுதும்.

எரிபததநாயனுர்க்கும், கருவூர்க்கும், ஆம்பிரவதிநதிக்கும், சிவ
பெருமானுக்கும், விநாயகக்கடவுளுக்குஞ் சிலேடை.

ஐம்பொருட்சிலேடை.

பரசு கொளலாற் பவானியிட மார்ந்து
விரவுநலி தீர்த்தலான் மேற்பணியால் வஞ்சி
யரியத்தம் பத்தத்த னுறுமுனோ னன்ன
வெரிபத்தன் றாள்பணிவோ மே.

கும்பாபிடேகத்திற்கும், கருவூர்க்கும், ஆம்பிரவதியாற்றுக்கும,
பசுபதீசப்பெருமானுக்கும், பிரமனுக்கும், திருமாலுக்கும்,
தமழ்க்கும், ஆரியவேதத்திற்கும், தமிழ்வேதத்திற்கும்,
மயகுரவருக்குஞ் சிலேடை.

பதின்பொருட்சிலேடை.

வாரம் வரலால் வருகுவனங் கோடலாற்
சாரஞ் செறிதலாற் சாரகதியாற்—சீரகரு
வூரா றரனயன்மா லொண்டமிழ்வே தங்குரவர்
நேராங்கும் பாபிடேக நேர்.

இச்சிலேடைச் செய்யுள்களைக் கண்ட கருவூர்ச்சிலேடைச் சிங்கமும் பிள்ளையவர்களை யுள்ளிற்போற்றியது. கருவூர்த் தேவர்க்குப் புராணசாரஞ் செய்யுமாறு வேண்டிய தாண்டவமூர்த்தியி னடியவர் களிக்க ஓர் விருத்தமுஞ்செய்தனர். கருவூரக்கனவான்களும்,தனவான்களும் கதிரைவேற்பிள்ளைக்குக் கெழுதகை நண்பராயினர். அலுவலொழிந்த காலந்தவிர மற்றைய காலங்களில் கற்றைச்சடையான் நெற்றியிற்றோன்றிய வெற்றிவேற் குகன்றாளை யகத்தாங்கி யவதானப் பழக்கஞ் செய்துகொண்டு வாழுங்காலை, யவர்மனைவியார் வடிவாம்பிகையோர் ஆண்மகவின்று,சிவநாம முச்சரித்துக் கொண்டே சச்சிதானந்த சிற்சோதியிற கலந்தனர். அஃதும் எஃகவேலன் திருவருளா மெனவுன்னிச் சுதையையும். சுதனையும் தம்மைப் பெற்றோர் பால் சேர்க்கவேண்டுமெனத் தீர்மானித்து,யாழ்ப்பாணம் நோக்கினர். மத்தியில்திருச்செங்கோட்டிற்றங்கி "அரனேயறுமுகன்" என்னுமரிய உபந்நியாச மாரி பொழிந்தனர். அதைச்செவிமடுத்த அடியவாகளடைந்த ஆனந்தத்திற் கோர் வரம்பின்று. மூன்றுநாள் அத்திருப்பதியில் பத்தியாயிருந்து பின்னர் வேளாளர்வாழும் வீணுகான புரமடைந்தனர்.

ஆங்கே இருமொழிக் கடலையும் பருகி யேப்பமிடும் புலவாபெருமான்கள் முன்னர், சந்நிதிவேள் ஆலயத்தினும், புலோலி பசுபதீச்சுரப் பெருமானுர் ஆலயத்தினும், பிள்ளையவர்களால் சோடசாவதானமும், அஷ்டதசாவதானமும் செய்யப்பட்டன. இங்ஙனஞ் சிவநாதனருளால் அவதானஞ்

செய்த் தவநாதரைப் புநர் விவாகஞ்செய்து கொள்ளுமாறு பெற்றோரும், மற்றையோரும் வேண்டினார்கள். அன்னவர் முகநோக்கி "அன்புடையான சென்னைக்கேகிச் சொன்னயமுடைய நன்னயச் சுவடேயர்கள் வரம்பிலா இறும்பூதெய்தும் வண்ணம் சதாவதானஞ்செய்து மீண்டும் நுங்களைக் காணச் செங்கை வேலன் திருவருளிருப்பின், புநர்விவாகம் புரிந்து நும்மைப் புளகம்போர்ப்பச் செய்வல்" என்று மொழிய, தந்தையும், துணைவரும், குரவர்களும் நாவுலர்ந்து மறுமொழி பகரவும் வாயெழாது நீர்நிரம்பிய கண்ணுடையரானார்கள். தஞ்சோதிடத்தை யவர்கட்குக் காட்டி

"முதிர்தரு தவமுடை முனிவ ராயினும்
பொதுவறு திருவொடு பொலிஞ ராயினு
மதியின ராயினும் வலிய ராயினும்
விதியினை யாவரே வெல்லு நீர்மையார்"

என்றவான்றோர் அமுதத் திருவாக்கின்படி விதியை மதியிலேன் எங்ஙனம் வெல்லுவேன்" மாட்டம் மொழவை மெய்யெனக் கொள்வரன்றோ மயங்கவேண்டும், முருகனருள் விட்டவழிநடக்கும், அஞ்சற்க" என்றுபல வுறுதிமொழிகளை உற்றோர் முதலியோர்க் குரைத்துக் கொண்டிருந்தனர். அதுபோது கரூரூர்த் துரையவர்கள் கதிரைவேற்பிள்ளையை நீலகிரிக் குன்னூர்க்கு வருமாறு கடிதம் விடுத்தனர். யாமும் எமது சபையின் மூன்றாம் வருடோற்சவத்தை முரணாது முற்றுப் பெறுவிக்கச் சென்னைக்கு விஜயஞ் செய்யுமாறு கடிதம் வரைந்தேம். அவ்விரண்டு கடிதங்களையும் தாங்கி உடன்றோன்றிய உத்தமியை யருகழைத்து "அம்ம! எனது புதல்வியாய சிவஞானம்பிகையையும், புத்திரனாய திருநாவுக்கரசையும் நுஞ்செல்வர்கள் போலப் பாதுகாத்தல்வேண்டும். யான்சென்னைசென்று குன்னூரில் சின்னாள் தங்கி மீள்குவல்" என்றுரைத்து அவர் மாட்டுச் சிறுமியையும், சிறுவனையும் ஒப்புவித்துச் செல்வியை நோக்கித் "திலதவதியே! நின்னருமைச் சோதரன் திருநாவுக்கரசைப் பத்திரமாய்ப் பாதுகாக்கவும். யான் ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜனசபையின் மூன்றாம் வருடோற்சவத்தை யினிது நடாத்திச் சதாவதானஞ் செய்யச் சென்னைக்குப் போகின்றேன்" என்றுகூறி விடைபெற்று வெளிக்கிட்டனர் வேலர்.

## ஐயாற்றைக்கண் டறுமுகன்சபை சேர்ந்தது.

தாண்டகவேந்தர்க்குத் துணைகையிலைத் தனிக்கோலத்தைத் தற்பரசிவம் சிறப்பனையோடருள்பெற்ற பஞ்சநதத்தைப் பார்க்கப் பண்ணுளாக வுள்ளத் தெழும் பேரவாவானது பிடர்பிடித்துந்த, டியில ா இடையில் புகைவண்டிவிட்டிழிந்து, திருவையாற்றை நோக்கிச் சென்றனர். தலையில் இரண்டாமுறை யுற்சவஞ் செய்த நல்லை நாவலர்மாணவரின் மாணவர் வரவைக் கேட்ட வள்ளலடியார்கள் வரம்பிலா இறும்பூதெய்தி "எங்கள் தவமே தவம்" என்றியம்பி, ஆலய அரசுவ க்கண்மீது பூமாலை, பன்னீர், சந்தனம், பரிவட்டம் முதலியன அமர்த்தி யெதிர்வந்து கதிரைவேற்கு வந்தனைசா

ரங்கள் செய்தனர்கள். அவ்வடியவர்களுடன் அகம்பிரமவாதக் கரிகளை யழித்த அரியும் ஐயாற்றுப்பெருமானையும், பெருமாட்டியையும் தரிசித்து ஆனந்தவுருவாயது ; பின்னர் சிவவுருவாய் விளங்கிய சித்தாந்தச் செல்வர்கள் விழைந்தபடி சைவசித்தாந்த மகாசரபம் அத்திருத்தலமானபியத்தை யுபந்நியசித்தது. மீண்டும் ஆலயத்தைக்கண்டு வணங்கிவுண்மைச் சிவனடியார்கள்பால் விடைபெற்றுப் புகைவண்டியேறிப் புண்ணியர் வாழுங் கண்ணியச்சென்னை சேர்ந்தனர். அடுத்த நாள் (17-2-07.) வருடோற்சவம் தொடங்கப் பெற்றது. அன்றுகாலை குன்றவில்லேந்திக் குறுநகையால் திரிபுரமெரித்த விரிசடைச் சுந்தரேசர் சுந்தரவாலயத்தி லெழுந்தருளியுள்ள கந்தனும் எந்தைக்கு அந்தணாகளைக் கொண்டு ஆகமவிதியொருசிறிதும் வழாது அபிடேக அலங்காரங்கள் செய்வித்துச் சிங்காரவேலரைத் தங்கவிமானத்தி லெழுந்தருளுவித்துத் திருவீதி மகோற்சவம் நடத்தப்பட்டது. பூதியணிந்த வேதியர்கள் சிவநாம சங்கீர்த்தனச் சந்தடியும், பலப்பலச் சைவசித்தாந்த சபைகளின் தமிழ்வேதபாராயண முழக்கமும், வாத்திய கோஷமும பேட்டை யெங்கணுஞ் செவிடுபடுத்தின. மரகதமயூரன பின்னர் மறையோதி வந்த இறையடியார் குழுவில், கதிரைவேலர் அன்றுவிளங்கிய மேன்மையை யென்னென்று விரிப்பேம். மாலயனிந்திரன் மற்றையவானோர் முனிவர்கள் போற்றக் கயிலையங்கிரியில் வீற்றிருந்தருளுங் கங்காதரனே யெனக்கண்டோர் கழறவிலங்கினர். இங்ஙனம் எழுந்தருளிய பெருவாழ்வைக்கண்ட நம் பேட்டைவாசிகள் கதிரோனைக் கண்ட கமலம்போல் அகமுகமலர்ந்து, தத்தமில்லங்கடோறும் பத்தியாய்க் கதலிவிருக்ஷங்களும், கேதனங்களும், பந்தர்களும், தோரணங்களும் நாட்டிப் பூரியரல்லாச் சீரியர் புகழும் புனிதக்குரவாக்குப் பூமாலை சாத்திப் புளகம்போர்த்தனர். அன்பர்கட்குச் சர்க்கரை, கற்கண்டு, கனிவகைகள் வழங்கப்பட்டன. மகோற்சவம் முற்றுப்பெற்றவுடன் வெற்றிவேலர் மாலையை எமது வெற்றிவேலர்க்குச் சூட்டி, வாத்தியக் கோஷத்துடனும், திருவருட்பா விஜயநாமாவளி முழக்கத்துடனும் சபாகிருகத்திற்குச் சென்றனர் பாலசுப்பிரமணிய பக்தர்கள். ஆசிரியர் அறுமுகன் சபையடைந்து ஓர் அரும்பீடத்தில் அமர்ந்ததும், அவரடிகளை முடிமேலணிந்தனர் மடியிலா மேதாவிகள். பிற்பகல் மகேஸ்வரபூஜை நடந்தவுடன், கூடியபெருஞ்சபைக்கும் அக்கிராசனம் வகித்து வருடோற்சவத்தைச் செவ்வனே நடாத்தினர். அன்றிரவு இராயப்பேட்டைக் கணுள்ள செல்வர்களை யழைப்பித்து "அன்புடைச செல்வர்காள்! இற்றைபகதினம் இயன்நடந்தேறிய வுற்சவத்தின் மாண்பை யெம்மாலெடுத் தியம்பற்பாலதன்று; இங்ஙனம் பிரதியாண்டினும் நடத்தவேண்டியதுங்கடமை. சபைக்கு மண்டபம், மணி, முதலியன இல்லாதிருத்தல் பெருங்குறைவாயுளது. அவையிற்றை விரைவில் பூர்த்திசெய்து சபைக் குபகரிக்கவேண்டுவதூஉ நுங்கடமை." என்று மொழிந்து, அங்கத்தவர்களைநோக்கி "நான்காம்வருடோற்சவத்திற்கு அக்கி

ராசனம் வகிப்ப நாயகன் எவரைவிதித்துளரோ அறியேம்" என்று கலங்குமுளத்தராய்க் கரைந்து, சிந்தாதிரிப்பேட்டைக்குச் சென்றனர் கதிரேசற்பிரியாக் கதிரைவேலர்.

## சதாவதானஞ் செய்த மாட்சி.

அடுத்த ஆதிவாரம் (24-2-07.) சென்னை இலக்குமி விலாச மண்டபத்தில் ஆடகமன்றுடிக் குமரனுங்குன்றுடித் திருவடிக்கண் இடையறாப் பேரன்புவாய்ந்த பிள்ளையவர்களாற் சதாவதானஞ் செய்யப்படுமென வேதாகமோக்த சைவசித்தாந்த சபையார்களால் பத்திரிகைகள் பரப்பப்பட்டன. அவையிற்றைக் கண்ட அனபர்கள் 12 மணிக்கே நாடகமண்டபத்திற்கு விஜயஞ் செய்தனர். அம்மகாசபைக்கு அத்தியாச்சிரம பாலசரஸ்வதி ஸ்ரீலஸ்ரீ ஞானானந்தசுவாமிகள் அக்கிராசனம் வகித்தார். அப்பேரவையில் வீற்றிருந்த முத்தமிழ்க்கல்வி நிரம்பப் பெற்ற முதியோர்கள், ஆரியக்கலைகளில் வல்ல சூரியர்கள், ஆங்கிலபாடையிற்றேறி வித்தியாப்பட்டங்கள் பெற்ற வக்கீல் சிகாமணிகள், கணிதசாத்திரிகள், பூகோளசாத்திரிகள், ககோளசாத்திரிகள், தத்துவசாத்திரிகள், இன்ஸ்பெக்டர்கள், எட்மாஸ்டர்கள் முதலியபண்டிதர்கள் அவதானப்பரீக்ஷிகர்களாக ஏற்பட்டனர்கள். அவ்வித்துவமணிகள் பொறித்த வினாக்கட்கு மாயாவாத தும்சகோளரியவர்கள் வேலுமயிலுந்துணை, வேலுமயிலுந்துணை என்னுந் திருநாமத்தை முழக்கிக்கொண்டு, தகுந்த விடைகள் விளம்பினர். அவ்விடைகளைக் கேட்ட அவதானச் சோதனைக் கர்த்தர்களும், அக்கிராசனரும் அவதானியைப் புகழ்ந்ததை யாண்டு வரையப்புகின் நீண்டுவிடுமெனக் கருதி விடுக்கின்றாம்.

அவதானப்பரீக்ஷிகர்கள் கடாவிய வினாக்களையும், அவரவர் அபிதானங்களையும், அவைகட்கு அவதானச்சிங்கம் அளித்தவிடைகளையும் இவண் விரிக்கிற் பெருகுமாயினும், அவையிற்றி னோர்பாகமாய கவிபேதங்களை மாத்திரம் புவியுள்ளார்களிக்க ஈங்குக்காட்டுதும்.

பரீக்ஷிகர்—திருமயிலை வித்துவான் வெள்ளியம்பல வுபாத்தியாயர் குமாரர சோமசுந்தரம்பிள்ளை யவர்கள்.

வினா—கபாலிக் குளத்தில் பூ சரஞ்சரமாய் விழக் கொத்திழுத்து சுட்டது
 எனும் பொருள் தரக் கலித்துறையிற் பாடவேண்டும்.

விடை. உளத்திற் றுயருறும் வானவர் காமனை யுந்தவன்றன்
 களத்திற் கருமுறுங் காபாலி முன்னொரு கன்னல்வில்லா
 ருழக்கச் சரஞ்சர மாப்பூ விடுப்பதி யால பத்துக்
 குளத்தில் நெருப்புக் கொதித்தது சுட்டது குற்றமன்றே.

(ப-ர்) காஞ்சிபுரம் பி. செ. முருகேசமுதலியா ரவர்கள்.

வினா—முருகனுக்கும், நவவீரர்க்கும், காஞ்சிக்கும்
 சிலேடையாய் பூ வென்றெடுத்துக் து வென முடியும் நேரிசை
 வெண்பாவாகப் பாடல் வேண்டும்.

விடை. மூவாத தன்மையினால் மோகத்தை நீக்குதலால்
காவார் வைத்தலால் கண்ணுதலின்—பூவார்
நிறத்தால் வேணுமுருக னேரி னவவீர
சொற்கருந்தி நேமிரனவே சொல்லு.

(ப-ா) மயிலை அரங்கசாமி நாயகர்.

வினா—கோலம் என்று தொடங்கி, பார் என்று முடியும் ஓர் நேரிசைவெண்பா வில், சைவசித்தாந்தத் தாலன்றி முத்திகிடைக்கா தென்னும் பொருளையடக்கிப் பாடவேண்டும்.

விடை. கோலஞ்சேர் சைவமெனுங் கொள்கை யரங்கமே
மேலுமோர் சாமமையைச் சேர் மேலவனே—ஞாலமதில்
சித்தாந்த ஞானஞ் சிறந்ததன்றி யெவ்வுயிர்க்கும்
பத்திமுத்தி சேரா பார்

(ப-ா) யாழ்ப்பாணத்துத் தெல்லிப்பழை இராசரத்தினம் பிள்ளையவர்கள்.

வினா—சபாமண்டபப்பெயரும், நாற்காதத்திகையாயிற்றென்றும், பசுபுலியைத் தின்றதென்றும் சொற்பொருட்பின் வருநிலையணியமைத்து ச என்று தொடங்கி ஏ என்று முடியும் ஆசிரியப்பாவாகப் பாடவேண்டும்.

விடை—சந்தமா ரிலக்குமி விலாச மென்னும்
இந்திர மண்டபத் திருந்திடும் புலவருள்
நூலறி தகுதிய நயனுநல் கேண்மோ
இறும்பூ தன்ன வியனுறும் பலகால
வான்பொய்த் திமங்கடுத் துறத்தலா லீரத்
மாசியென மதியுங் காதத்திகை யாமே
புலிப்பூண் டைதமான பொதுவிக ரத்தால்
புலிவெளிப் படுத்துப் புல்கூட் டடைத்த
புல்லைப் புலியால் வாங்கியே பசு
தின்றதோர் புதுமைத் தினநியல் பறிதியே

(ப-ா) உரையாசிரியர் கா. ஆலாலசுந்தரம்பிள்ளையவர்கள்

வினா—சிவபெருமானுக்கும், அவதானசபைக்கும், சமுத்திரத்திற்கும் சிலேடையாய், மூன்றும் அடியில் சைவசித்தாந்தக் கருத்துடையதாய சங்கப்புலவ என்றெடுத்து ர் என்று முடியும் ஓர்நேரிசைவெண்பாவாகப் பாடவேண்டும்.

விடை. சங்கப் புலவமணி சார்தலாற் றத்துவத்தால்
தங்கக் கலைமதியஞ் சார்தலாற்—றுங்கமதாற்
பேராற் சத்சத் தடக்கலாற் பெம்மானும்
நேரவையும் வேலையுமே நேர்

## கதிரைவேற்பிள்ளை அவர்கள் சரித்திரம்.

## நீலகிரிக்கேகி நீலகண்டராயது.

சண்முகனருளாற் சதாவதானஞ் செய்த சைவசித்தாந்த மகாசரபஞ் சீதளத் திருநோக்கத்துடன் நீலச்சிகியோன் திருக்கோயில் கொண்டெழுந்தருளியுள்ள நீலகிரிக்குன்றூர்க்கேகியுத்தியோகத்தை யேற்றுக்கொண்டது. அத்திருப்பதிக் கணுள்ள பத்தர்களாம் வித்துவ சிரோன்மணி சொக்கலிங்கம் பிள்ளைமுதலியோர், "ஈழநாட்டிற் றோன்றிச், சோழநாடு முதலிய தமிழ்நாடுகள் வாழத்தெய்வத்திருவருள் கைவந்து கிடந்த சைவத்திருவாளர்களருளிய திருமுறைகளின் மாண்பைக் கவிமிக்க இக்காலத்தில் இராசாங்கமேறி வலியுறுத்திய பெருமான்நம் நீலகிரிக்கெழுந்தருள நாம்புரிந்த புண்ணியமென்னோ?" எனவிசைத்துக் கதிரைவேலர் பாலணைந்தார்கள். அன்னவர்களைக் கண்டமன்னர் நன்னயமாக "நண்பீர்! சைவசித்தாந்த சபையொன்று தாபித்தல்வேண்டும்; அச்சபையில் சைவபுராணப் பிரசங்கங்கள் நடைபெறல்வேண்டும்; இங்கேயுள்ள குளிர்காற்று நந்தேகத்திற்குத் தீங்கு நிகழ்த்துமெனக் கருதுகின்றேம்; இரண்டுமதிக்குள் இவண் குளிர்முகத்துடன் உலவும்வாயுபகவான் எமக்கு நேயனாவனேல், நுங்கண் முன்சதாவதானஞ் செய்துகாட்டுவல்" என்றியம்ப, பூதியணிந்த புண்ணியர்கள் "சோதிபோல் தாங்கள் சொற்றபடி இப்பங்குனி மதி கழிந்தவுடன் வருடப்பிறப்பன்று அடியேங்கள் ஓர்சபைதாபிக்கின்றேம்; மத்தியில் இளையான் குடிமாற நாயனார் புராணத்தைப் பிரசிங்கிக்குமாறு பிரார்த்திக்கின்றேம்" எனக்கூறினார்கள். அத்துவித சித்தாந்த மதோத்தாரணர் அவர்கள் வேண்டுகோட்கிணங்கி பிரசிங்கித்து வந்தனர். அந்நாயனார் பெருமான் அருமைத் திருப்புராணம் முற்றுப்பெறுவதற்குள் வெங்குளிர்சுரம் எங்குருநாதரைத் தாக்கியது. சொக்கலிங்கம் பிள்ளையவர்கள் நாவலர் பிரஸிலுள்ள ஸ்ரீலஸ்ரீ சதாசிவம்பிள்ளையவர்கட்குத் தந்தியடித்தனர். கிளைடன்துரை சிந்தாதிரிப்பேட்டைச் செல்வர்க்குத் தந்திகொடுத்தனர். சுரநோயாற் பீடிக்கப்பட்ட அக்காலத்தும் அவரைக்காணவந்த பெரியோர்கட்குச் சிவஞானமியங்களையே யெங்குரவன் போதித்தனரெனின், அன்னவரின் தவப்பெற்றியை யறிவிலி எங்ஙனம் வகுப்பேம். என்றும் நோய் கண்டறியார் நோய் கண்ட ஐந்தாநாள் தந்நண்பராய, சொக்கலிங்கம் பிள்ளையையும், அவர் தமயனாரையும் அருகழைத்து, நடைபெற வேண்டிய இல்லௌகிக விடயங்களைச் சிலமொழிந்து, திருவையாற்றிற் கயிலாய தரிசனத்தைத் தாண்டவமூர்த்தி காட்டியகாலை தாண்டக வேந்தருளிச் செய்த "மாதர்பிறைக் கண்ணியானை" என்னும் அருட்பதிகத்தை யோதி அருகிருந்த அரனடியார்களிக்கப் பொருளும் விரித்துப் பராபவ ௵ பங்குனி ௴ 13௳ செவ்வாய்க்கிழமை மகநக்ஷத்திரங் கூடிய துவாதசித் திதியிலே, அகண்டாகாரப் பொருளாஞ் சிவத்துட னிரண்டறக் கலந்தனர். தந்திசமாச்சாரங்கள் தமிழுலகெங்கணு முலவின. சென்னைச் சிவநேயர்கள் யாவரும் ஸ்ரீகபாலீச்சுரப் பெருமானார் கண்டிகையுந் திருநீற்றையும் பொருளாக்கொண்ட அறு

பான் மும்மைநாயன்மார்களுடன் திருவீதிவலம்வந்து, திருக்கோயிலுட் பிரகாரத்தைச் சுற்றுந் திருக்கோலத்தைத் தரிசித்துக் கொண்டிருந்த காலை சென்னைக்குக் கதிரைவேலர் கபாலீச்சுரனுடன் கலந்தார் என்ற சமாசாரம் எட்டியது. கபாலீசா கபாலீசா என்னுஞ்சந்தடி கதிரைவேலா கதிரை வேலா எனமாறியது. தொண்டைநாடு, பாண்டியநாடு, சோழநாடு, ஈழநாடு முதலிய நாடுகள் துக்கசாகரத்திலாழ்ந்தன. தகனகிரியையும், அத்திசஞ்சயனமும் குன்றுரில் நடைபெற்றன. அந்தியேஷ்டிமுதலிய கிரியைகள் யாழ்ப்பாணத்திலேநடந்தேறின. அக்கமணிமையயும், அருணீற்றையும் அன்புடனணிந்து, பன்னிருமுறைகளைப் பாராயணஞ்செய்யும் பக்தஜனசபையார்கள் கதிரைவேற்பிள்ளை யவர்கள் அற்புதத் திருவுருவப் படங்களைத் தத்தம், சபைகளினும், இல்லங்களினுந் தாபித்து, மெய்ப்பத்தியுடன் பூசித்து வாழ்கின்றார்கள்.

---

## வாழி விருத்தம்

பன்னிரு முறைகள் வாழ்க பாரினி லவற்றின் மேன்மை
சொன்னநற் கதிரை வேலெஞ் சுந்தரக் குரவன் வாழ்க
வன்னவ னூல்கள் வாழ்க வருஞ்சபை பலவு நங்கள்
பன்னிரு புயத்தோன் பால பகவனூர் சபையும் வாழ்க.

---

## கதிரைவேற் பிள்ளையவர்கள் சரித்திரம்

## முற்றுப்பெற்றது.

---

கதிரைவேலன் கழலிணை வாழ்க.

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்

---

யாழ்ப்பாணத்து மேலைப்புலோலி

சதாவதானம்,

# ஸ்ரீலஸ்ரீ-நா. கதிரைவேற்பிள்ளை யவர்களின்

பிரிவாற்றாமைக்காகப்

பல வித்வசிரோன்மணிகள் இயற்றிய

# செய்யுள்கள்.

---

யாழ்ப்பாணத்துக் கீரிமலை - சைவப்பிரசாரகராய

மகாவித்துவான் - ஸ்ரீலஸ்ரீ - சு. சரம்பையரவர்கள்

இயற்றியது.

---

எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

சீர்பூத்த மலைவளமுந் தரைவளமுங் கலங்களேற்றுஞ்
செயல்பூத்த கடல்வளமுந் திகழுந் தெய்வ
நீர்பூத்த தென்னிலங்கை வளமுவளமு யாழ்ப்பாண
நிலம்பூத்த பிரிவாய வடமராட்சிப்
பேர்பூத்த நகரதிபன் கொன்றையறு கரவிரேடு
பிறைபூத்த சடாமுடியிற் பெருமை வாய்ந்த
ஏர்பூத்த கங்கைகுல பரம்பரையிற் றிலதனுகி
யெழில்பூத்த குலங்குடியி னேற்றமிக்கோன். (க)

அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

மேலைப் புலவ ரவியுண்ண விருந்து கொடுத்து விளம்புமறை
ஞாலப் புலவர் முதலாய நான்கு வருணத் தவர்களுக்குஞ்
சாலப் புலவ ரொலிதழைத்துத யங்குஞ் செல்வ நிதிநிறைந்த
மேலைப் புலோலி நகரதிபன் வேளாண் குலத்தை விளக்கிடுவோன. (உ)

தென்னவன்றன் றொடையடைவாய்ப் படையுடையோ னங்கிகுல
சேரதேய, மன்னவன்முர் மணமகலக் குவளைமலர் மாலையணி மருமம் பூண்
டோன், பொன்னிவளத் துறையுடையோன் கொடியிடைய மேழிவரை

புனிதன் மும்மை, மன்னவர்கள் படைத்தொகையின் குடியடிமைத் திறம் பூணு மாட்சியாளன். (ரு)

காயா மரமென் றுதவாத கல்லாக் கிறீஸ்து மதத்தோடு
மாயா வாத வைட்டிணவம் வாட்டும் பௌத்த மாதியன
பேயா மென்னப் புரட்டுமதப் பித்தாட் டகன்று பிழைத்துய்யத்
தாயா மென்ன வைதீக சைவம் வளர்க்குந் தன்மையினான். (௬)

பலப்பல சபைக டோறும் பண்டிதர் புலவர் முன்னே
குலப்பட மாயா வாத தும்சகோ ளரியென் றோது
நலப்படு பட்டத் தோடு நண்ணுமத் துவசித் தாந்த
நிலைப்படு சைவம் நாட்டி நின்றவப் பெயரும் பெற்றோன். (௭)

தில்லையூர் காஞ்சி யோடு திரிச்சிராப் பள்ளி சென்னை
யெல்லையி றலங்க டோறு மிணையிலாத் திருவ ருட்பாச்
சொல்லுமுற் சவந டாத்தித் தொண்டர்கள் போற்றி செய்ய
வல்லுநன் பகலு மேத்து மதுவினோ டத்த னானோன். (௮)

மாகப் பிள்ளை சிறுவமுவால் வந்த னைந்த தெனவாய்ந்த
நாகப் பிள்ளை தவப்பயனாய் நண்ணு தெய்வ சுபக்கிரக
யோகப் பிள்ளை குடிப்பிள்ளை யுண்மைச் சைவ குலப்பிள்ளை
யாகப் பிள்ளை யெனவுதித்த வண்ணல் கதிரை வேற்பிள்ளை. (௯)

## எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

தருக்கள்பல வுடைமையினா லிந்திரனைக் கீழாக்கித்
தனதனைப்பன் னிதியாலுத் தரத்தே யோட்டி
மருப்புடைய சுரபிகளால் வசிட்டனது பெருமையிறு
மாப்பினையுஞ் சிறிதேனு மதியா னாகி
விருப்புடைய விண்டுவவ தாரத்தை யத்தொகையால்
மேலுறமு மவதானம் விளங்கச் செய்தே
யுருப்படிவ முழுதுமறி வாலிங்கு வகுத்தனைய
கதிர்வேலன் பெருமையெம்மா லுரைக்க வற்றோ. (௰)

ஆயிரமார் தலைபடைத்திவ் வுலகுதாங்கு மாதிசேடன்
றனதறிவைப் பூரணமா யவதா னித்தே
மேயவொரு தலைகொண்டு சதாவதான மெவ்விடத்தும்
விளக்கமுறப் புலவோரும் விரும்பிக் காண
மாயிருமின் ஞாலமதிற் சென்னைநகர் வந்தேறி
மண்டபத்திற் பலர்குழுமி மகிழ்ந்து பேசப்
போயிருந்து செயுந்திறனைச் சேடன்றான் கேட்டழன்று
போயொளித்தான் பிலத்தினுள்ளே மீளா னாக. (௰௧)

இத்தகைய வறிவாண்மை கண்டதேவ ரினியிவனே
சகச்சிரமா மவதான மெண்ணச் செய்வான்
சத்தியமா மிதற்குமுன்னே யெமது கோட்டி
தருவிப்போம் நீலகிரி தனிலே யென்று
யுத்தியொடு பராபவமாம் வற்சரத்தின் மீனமாதத்
தோங்கியபன் மூன்றுசே யுறும கத்தில்
வித்தகமா முபசாரத் தோடவனைக் கொண்டேகி
விமலனுல கதனில்வைத்தார் மீளா ருக. (௧0)

வெண்பா.

எண்டிசையும் முட்டி யிடமின்றி யப்பாலும்
மண்டுங் கதிரைவேன் மாபிள்ளை—கொண்டபுகழ்
கூர்மவுரை செய்யுங் குகப ராக்கிரம
மாமிவைகள் காட்டு மது. (௧௧)



. யாழ்ப்பாணத்து நீர்வேலி - மகாவித்துவான்

## ஸ்ரீலஸ்ரீ - ச. சிவப்பிரகாச பண்டிதரவர்கள்

இயற்றியது.

---

கலி வெண்பா.

எப்பா லகரு மியற்சொற் றமிழ்மொழியே
யெப்பாலும் பேசு மெழிலுடு—தப்பாது
தேவார மாதி திருவருட்பா மூக்கணுடைத்
தேவாரத் தோது திருநாடு—நாவாரக்
கந்தபுரா ணுதிமுறை கற்றுநனி கேட்டுணமோ
கந்தபுரா சப்பெருமை காணுடு—இந்திரரு
நாடுவள யாழ்ப்பாண நாடிதனி லுத்தரத்துக்
கூடுபுலோ லிப்பதிக்கட் கூடாதார்—நீடுமெதங்
கோட்டப் பிறந்துமனக் கோட்டமறக் கற்றுணர்ந்தெத்
நாட்டுக்கு நல்லிசையை நாட்டியவன்—பாட்டியலார்
பண்ணூ லுரைகணனி பன்னூ லவையச்சின்
முன்னூ விளக்கியருண் முன்னவரும்—மின்னோர்ச
தாவீதா னம்புரிந்து தாவதா னம்பகைகை
மேவவே செய்தவல மேவுசிங்க—சாவமெனும்
பிள்ளை கதிரவேற் பிள்ளைபுவி விட்டகனு
வுள்ளநனி சோருமுற வுள்ளீர்காள்—பிள்ளையவன்

இப்பாருட்பா விசைநிறுத்தி யிங்கிதனை
யப்பாரு நாட்ட வடைந்ததுண்மை—யெப்பாருங்
கொள்ளவே ரெந்தையருள் கொள்ளைகொளச் சென்றனனென
றுள்ளமகிழ் கொள்வீ ருற.



நீலகிரிக் குன்னூர் தமிழ்ப் பண்டிதர்

## ஸ்ரீமந் - சொக்கலிங்கம்பிள்ளை யவர்கள்

இயற்றியது.

---

ஒரோ ரோரடி மிகுத்துவந்த கொச்சக வொருபோகு.

பொன்பூத்த மேலைப் புலோலிவரு புண்ணியனே!
தென்பூத்த சென்னை சிறக்கப் புகழ்படைத்தோய்!
மன்பூத்த தேகம் விடுத்துப் புவியகன்று
மன்பூத்த வானிற்சீ மானே புகுந்ததென்னே?
மாக்கதிரை வேற்பிள்ளைச் சீமானே புகுந்ததென்னே? (க)

கர்த்தனடி போற்றுங் கதிரைவேற் பிள்ளையையா
தந்தையரு மேங்கச் சகோதரர்க ளாமழுங்க
செந்தமிழ்தேர் வித்வ சிகாமணிகள் சோர்தனுங்க
இந்தப்பூ நீத்துமே லேனோ வகன்றனைநீ?
எங்கள் மனமேங்க வேனோ வகன்றனைநீ? (உ)

சுத்தசைவ சித்தாந்தத் தோணில் கடற்படிந்து
தத்து மலைசூழுந் தாத்திரியி லுள்ளமெய்சேர்
வித்வ சனசமூக மெய்ச்சப் பிரசங்கம்
மெத்தப் பொழிமுகிலே விண்ணுற் றடைந்தனையோ?
வித்வக் கதிர்வேலே விண்ணுற் றடைந்தனையோ? (௩)

மன்னு கடல்சூழ்ந்த வையகத்தா ரெல்லாரு
முன்னையாக மெச்சி யுரைக்கும்வகை செய்வேனோ
னென்ன வெனக்குரைத்த வின்கதிரை வேற்பிள்ளை
மன்னவனே யையா மறையச் செல்லழகோ?
மாவித்து வானே மறையச் செல்லழகோ? (௪)

ஒருகு ளொருவ னின்றில்லை யென்னும்
பெருமை யுடைத்துலக மென்றபெரி யோர்த
முரைசே ருவமையா வுனையே யுரைத்திடுநீ
அரைசே யதனுண்மை யாட்டமாக் காட்டுதியோ?
ஐயா கதிர்வேலே யாட்டமாக் காட்டுதியோ? (௫)

பிற்றை யதனை நீதானே பேசி முடியென் றெனக்குரைத்தல்
கற்ற கதிரை வேலேநீ கண்ட நீதிக் கடுப்பதுவோ. (கரு)

புதிய வருடக் கொண்டாட்டம் பொருந்தக் கொள்ளு வீர்களென்று
முதிய மதியக் கதிர்வேலே மொழிந்த மாற்ற மெம்மனத்துப்
பதிய வைத்துப் பண்பாகப் படர்ந்தாய் நாங்கள் பக்கவருந்த
மதிய நதிய மமைத்தசடை வள்ளல் தூக்கு மலரடிக்கே. (கசா)

கால னுயிரைக் கவர்ந்தேகக் கனலா ராக்கை நீறாக்கப்
பாலு மாற்றிற் கரைக்கவதைப் பண்பார் நதியங் கொண்டேக
வேல னருளிவ் விதமானால் வித்தை மருசீர் நற்கதிரை
வேல வினியா மென்செய்வோம் மீட்டும் வல்லியோ வெமக்கிலையே. ()

பாரிற் புகழ்சேர் பஞ்சநதம் பார்க்கப் போவே னெனப்பல்கால்
பூரிப் புடனே புகன்றனைநீ பொய்யா முடலை யிவண்வைத்து
நேரிற் காணச் சென்றனையோ நிமல னினிய தரிசனத்தைத்
தேரிற் காணே னின்செய்கை தெரியச் சொல்வாய் கதிர்வேலே. (கஎ)

வாக்கு மனங்கட் கெட்டாத மாதே வன்சே ரையாற்றை
வாக்கு மன்னர் வழுத்தியசீர் மாதர்ப் பிறையாம் வண்பதிகப்
போக்கை யாங்க ளினிதுணரப் போற்றி யுரைதத கதிர்வேனின்
வாக்கிங் கெங்க ளிருசெவியில் மணியே போல வொலிக்குதையா. ()

பன்னற் கரிய நோயாளி படுக்கைக் கிடந்த வப்போதும்
பன்னிற் றிகழுங் கயர்த்தமுடை விமலன் பெருமை யல்லாமல்
நின்னற் றுணு வேறொன்று நிகழ்த்தா வாறு மற்றதனை
நன்னர்ப் பயிற்றி வைத்திருந்த நலம்போல் வேறு கண்டிலமால். (கஅ)

## கொச்சகக்கலிப்பா.

அத்துவித சித்தாந்த மருந்துணையை யிழந்தது காண்
சுத்தமுறு தீந்தமிழ்தன் திருச்சுதனை யிழந்ததுகாண்
மெய்த்தசிவ சமயமுமெய் வித்தகனை யிழந்தது காண்
வித்தகநற் கதிர்வேலன் விமலனடி யுறுபோழ்தே. (ககூ)

## நேரிசை வெண்பா.

சேர்ந்த பராபவத்திற் சீர்மீனப் பூர்வபக்கத
தார்ந்ததெய்தி பன்மூன்றி லாமகத்தி—லேய்ந்தசெவ்வாய்
நாமாண் புலமையுறு நற்கதிரை வேற்பிள்ளைச்
சீமான் சிவமாந் தினம். (உ0)

### யாழ்ப்பாணத்துப் புலோலி

## ஸ்ரீமந் - வே. சு. முருகேசபிள்ளை யவர்கள்

### இயற்றியது.

---

### விருத்தம்

சீர்பெருகு சாலி யாயிரத் தெண்ணூற் றிருபது சேர்பதி னொன்பான்
பார்புகழ்ந் தேத்து பராபவ வாண்டிற் பங்குனி பத்தொடு மூன்றிற்
காரெரி பூர்வத் துவாதசித் திதியிற் கவின்றருசூழ் புலோலியில் வாழும்
பேருறு புலமைக் கதிரைவேற் பிள்ளை பிரமுகன் பதநிழல் சேர்ந்தான் (௧)

சீரேறுகலியத்தமையாயிரத்தெட்டுச்சேர்ந்திடுபராபவத்திர
ரிகழுபங்குனிபதின்மூன்றெனுந்தேதியிற்சோமபௌமவாரநிசியிற்
செல்மாகநாளுடன்சோபாலவமமுற்றதுரிதியோகம்மதனிலே
செறிகின்றவளர்பக்கத்துவாதசித்திதியத்திற்செய்யத்துலைலக்கினத்திற்
காமேவுகைலையங்கிரியிலுறைகண்ணுதற்கடவுள்சண்முகங்கடிகளே
கைதொழுநேசனுங்கற்றவாக்கன்பனுங்கருணைக்குணக்குன்றமாங்
கலைவல்லநிபுணனுமெதிர்பண்டிதர்க்கெலாங்காரிடியையொத்தசிங்கங்
கருதுயாழ்ப்பாணத்துப்புலோலிநகர்மேவியேகன்பப்பிரசங்கங்கள்செய்து
பாமேவுபுலவோர்கள்கலைவல்லவேதியர்கள்பண்போடுவந்துபரவப்
பற்பலவிலக்கணவிலக்கியமுதலாகப்பகர்சத்தாவதானமும்
பண்ணியேசோழவளநாடுடன்பாண்டியும்பழஞ்சேரநாடுமுதலாயப்
பகருமெய்த்தேசமுஞ்சென்றுதன்சீர்த்திகள்பரவுறச்செய்யவல்லனும்
தாரேறுமுழவார்குலதிலகனுங்கதிரைவேற்சகலகலைதேர்பண்டிதன்
றனையாமுதலாவுள்ளசுற்றம்திரளெலாஞ்சந்தேகமுற்றலறவே
தருமூலகவாழ்வொருவித்தேவதுந்துபியார்ப்பச்சங்கரன்றிருவடிக்கீழ்ச்
சக்கசமாபானந்தமயபேறதாஞ்சுகக்கதிசார்ந்துவாழ்ந்திட்டானரோ (௨)

### வேறு.

பத்தர் முதலான பல்லோர்கள் கண்டுதொழச்
சித்த மொருமையுறச் செல்கதிரை வேற்பிள்ளை
வத்தன் பசுபதித னருட்பதத்திற் றானடைந்து
பத்திமையா யானந்த பரவசமா யுற்றனனே. (௩)

---

வித்துவான்

## ஸ்ரீமந் - அ. சங்கரலிங்கம் பிள்ளை யவர்கள், B. A.,

இயற்றியது.

---

கலிநிலைத்துறை.

மன்று ளாடிய மலரடி முடிப சைமணக்க
வின்று நாண்முதற் றமிழ்மொழி தன்மண மூக்கச
சென்று சேரநதனன் சிவனபதங் கதிரைவேற் செம்ம
லென்று கேட்டவ ரியாவரு மாரங்குவ மீரஙகி. (க)

முத்த மிழ்த்துறை முற்றிய புலவர்தம முடியே
வைத்த நல்லணி யாமென வையகம் புகழு
முத்த மக்கவி யேயர னருள்கொடு கனிந்த
பத்த னேயுனை யொப்பவர் பலரென வறியேம். (உ)

வன்பு பூண்டவன் மறைதொட ரிருபதத திடமே
யன்பு பூண்டவ னரும்புகழ் பாடியும் பரப்பி
யின்பு பூண்டநல் வாழ்வினி லிணையிலா வுறுதி
வன்பு பூண்டவன் றன்பிரி வாற்றுமோ வையம் (ங)

---

திருமயிலை ஸ்ரீகபாலீஸ்வர பக்தஜனசபைத்தாபகராய

வித்துவான்

## ஸ்ரீமந் - க. மு. அரங்கசுவாமி நாயகரவர்கள்

இயற்றியது.

---

எழுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

வான்புக ழேமக் கொடுமுடி யெனுமோர்
    வளம்பல பயக்குமா விலங்கைக்
சான்பட ர்ப்பத் தணிகெழு மேலைப்
    புலோலியாங் கவினகர் மேவும்
மேம்படு சைவ நலந்திகழ் வேளாண்
    குடியினி லுதித்தபாக் கியத்தோன்
தேன்மொழி கொழிக்குந் தமழ்க்கடற் கடந்தோன்
    கதிரைவேற் பெயர்மகச் சிறந்தோன. (க)

நூற்பல வியற்றிப் பிரசங்க வழியால் நாவலர் புறச் சமயிக ளுரையைப்
பாற்பட வொதுக்கி யாகம மேவத்தப் பயனுற வாதரித் தமர்ந்தான
ஏற்புறு மத்தா ணங்களுநே செய்திங் கேகியே சென்னைவிட் டகன்றோ!
போற்றுவார் புணர்ப் பெருமலை மீட்டுமே புகுந்தனன் பரகதி மாதோ! ()

அயிகக்முற் றுலகோர் வாழ்வே யனிநேர் கருமமல் முயற்சிகள் புரிப
மயக்கமுற் றிகலிச் சைவமா ஞனதம் தாமனனிரு கக்ஷியாய மலைந்தார
வியப்பினும் பார் ரென்றுரோ யிர மலிங்கற்கு விளக்குவ னொருக்கும்
நயப்புட னன்பு மலிபுகழ்ப் புலவன் நானிலம் நீங்கின தமமா!!

## கலித்துறை

மண்ணுலகத் துசே யுயிர்விடு காலை மாபாசக்
கண்ணுறு சுற்றங் கவலுறு மென்றோ கருமேகத்
தண்ணுறு நீலக் கிரிச்சை யாவித் தனிசோ நருாய
விண்ணுறவ கத்துக் கணிமையு தென்றோ மேலோனே (௭)

சிவமவளர் சோமசுந்தர நாயன சிவமேவ
வவமவளா சமயத் தவாவலி யடுவா ரியாரேயென
றிவணுள மருளாச் சிந்தனை யுறுவாக் கிருநேக்கி
யவிரொளி யெழுமா லெனவெளி வந்தா யறவோனே. (௮)

மறைபுகழ் சைவத் துறைமா பரியா மயலாலே
குறைபடு வாதக் கொடுமைக் கொட்டரக் குலைந்தித்
துறைவழி வெறிக் கொடியத் தூக்கித்து தூர்ந்தினை
முறைநிலை நாட்டிச் சிவபத முற்றுய முதியோனே (௯)



சென்னைப் பேயெக்சா ணா ஆபீஸில் ஆடிட்டராக இருந்தவரும்,
தற்காலம் சிங்கப்பூரில் வசிப்பவரும்,
வைதிக சைவ சித்தாந்த சண்டமாருதம்,
ஸ்ரீலஸ்ரீ - சோமசுந்தர நாயகரவர்கள் மாணாக்கருமாகிய
ஸ்ரீமந் - பச்சையப்ப நாயகரவர்கள்
இயற்றியது.

---

## ஆசிரியவிருத்தம்

சீர்கொண்ட கலியிலையாயிரத்தேழினிற்
றிகழ்பரபவ வாண்டினிற்
சோமன்சுக்கிலம்பத்தொன் றுமூன்றுந்
திகதிமங்களவாரமாகு

செம்மைத் துவாதசிமகயிலங்கிநெற்
றினத திரவிலேழ்மணிக்குத்
திக்கெங்கணும்புகழியாழ்ப்பாணதேயததிற்
சிறக்குநாகப்பிள்ளைதன்
செய்தவயிலங்கவருபுததிரசிகாமணி
செய்யகுணகணநவமணி
சிவோத்கர்ஷப்ரதிபாதிதஞானசாஸ்திரத்
தெளிவுதிகழ்சிந்தாமணி
சிவாத்விதோத்தாரணற்புதயமுதப்ராகட ...
செய்சபாரஞ்சிதமணி
தீயமாயாவாதவெஞ்சகப்புன்மதத
தி... ரகண்டகதினமணி
...பாகொண்டஸ்பென்ஸரண்ட்கோவின்மா... ஞானாய்ப
பிறங்குமப்பாசா... யின்
பீடுற்றவீட்டினுப் பட்டுநூற்காரராதம்
பெருமடாலயததிடத்தும்
பிரம்பூர்வொர்க்ஷாப்கூப்பராதிமாயாவாதப்
பெரியருநடுங்கியேங்கப்
பேசுநயவசனசாதுரியகோலாகல
ப்ரகடனப்ரதாபசீலன்
பேசருவேதாகமபுராணேதிகாசப்
பிரவர்த்தகாசார்யராம்
பெரியர்மாயாவாததும்ஸகோளரியெனும
பெயர்தரப்பெற்றநிரன்
ப்ரக்யாதஸ்ரீலஸ்ரீ ஆறுமுகநாவலர்
பிரகஸ்பதிக்குநிகராம்
ப்ரபலவைதிகசைவசித்தாந்தசண்டமா
ருதப்பெறலரும்பெயர்கொளும்
ஏர்கொண்டஸ்ரீலஸ்ரீசோமசுந்ரச்செம்ம
லிவர்கணற்குணம்பொலிந்தே
ாணமர்குவஞ்சப்புறச்சமயமதகரிக
ளேங்கவருகண்டீரவம்
எந்தைசிவசங்கரன்றிருவடியைநாரணனை
எட்டாதயர்ந்தபரிசும்
இனியதன்சண்பறிததருச்சித்தநேர்மையு
மிருக்காதிகூறிநிற்க
ாதறியமாட்டாதபாஞ்சராத்திரிகளா
மிரும்பைகட் கசனியன்றன்

ஏழைக்கிறிஸ்தவக்கொள்கையொருமசகமா
வெண்ணித்துய்க்குநீரான்
எழிற்றிருவரங்கத்துவித்வஜனகோடிக
ளௌலப்பிறும்பூதுகொள்வா
னிசைப்பருஞ்சதாவதானம்விளங்கும்படி
யினிதுடன்செய்தவறிஞன்
பார்கொண்டவுயிர்கள்மெமடையுநன்னெறியிணைப்
பரிவினுற்காட்டுவோனிப்
பாரில்வந்தருள்சமயகுரவர்வாக்கேயருட்
பாக்களாமென்றுஞ்செத்தார்
பலரையுமெழுப்புவன்வம்பணிதுததியெனப்
பத்திரிகாப்பறைசாற்றியே
பழிசமந்தேசெத்தகருங்குழிப்பிள்ளையின்
பாமருட்பாவேயென்றும்
பண்பார்ந்தசென்னைமாஜிஸ்டிரேட்கோர்ட்டில
பகர்ந்திடுஞ்ஜெயப்ரதாபன்
பங்காருநீலகிரிஸ்கூல்தமிழெட்மாஸ்டர்
பரவுகதிரைவேலிவண்
பரசிவாலயத்தருட்பாவுத்ஸவஞ்செய்த
பான்மைபொரவேதேவாதம்
பவனத்துமவ்வுத்ஸவஞ்செய்யவேயவண்
பரிவுடன்படர்ந்தனனரோ.

## அறுசீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.

இலக்கியமு மிலக்கணமும் ஞானசாஸ் திரமனைத்து மிலங்கக் கற்றே
விலக்குவிதி யனுசரித்துப் பூதியுடன் கண்மணியும் விளங்கக் கொண்டே
இலக்குமிநா மகடங்கு முறைவிடமாய்ப் பொலிவெய்தி யெவர்க்கு முற்ற
கலக்ககற்றும் பாண்டித்ய கதிரைவேற் பிள்ளையே கண்ணு வானே. (க)

கண்ணுவாய் மாணுக்கா தமைத்திருத்திப் போதிக்குங் கவியாற் றற்கோ
தண்ணியபே ரன்பினெடு மின்மொழியா லன்னவரைத் தணிவித் தற்கோ
மண்ணினதி பொறையுடைமைக் கோசத்ய வரிச்சந்த்ரன வாக்கி னுக்கோ
நண்ணிமுறை யிட்டவர்க்குக் கன்னனைப்போ லுதவிபுரி நன்மைக்கோதான்.

கோதானம் பூதான முதலியதா னங்களுக்குட் கோதி லன்னம்
மீதான மெனினுமதன் மேற்றான மாப்புகல்வர் வித்தை தன்னை [டே
யீதாய்ந்தே யிருட்டுமிக்குங் குருத்தொழிலைப் பரிவினுட னேற்றுக் கொண்
யோதாகிற் பாருக்குள் ளன்போடுந் திறனோடு முணர்த்த லுக்கோ. (௩)

உணர்வரிய பதிபசுபா சத்தியல்பு விரித்துரைக்கு முயர்சித் தாந்த
நுணுக்கமெலாஞ் சந்தேக விபரீத மறக்கற்று நுதற்கண் ணுனின்
மணக்குமலர்ப் பதத்தன்பின் வழிபடுமெய் யடியவர்தாண் மனத்தேவைத்து
வணங்கிமிகப் பூரித்துப் பூசித்து நேசிக்கு மாண்புக்கோதான். (ச)

மாண்பிறையு மில்லாத வஞ்சகப்புன் புறச்சமயர் வாது கூறி
மாண்பிறையு நதியுமணிர் செஞ்சடிலப் பெருமானை மதியா ராகில்
வீண்போது போக்காதக் கணங்களிறு மேற்செல்லும் விறற்சீ யம்போ [ன்.
லாண்மையோ டன்னவர்பின் வாங்கிடவே சென்றடர்க்கு மாற்றற் கோதா

ஆற்றிவிட்ட வேடெதிர்த்துச் செல்லவென்பு பெண்ணுக வரவு நீண்டிக்
கூற்றுலகஞ் சேர்ந்தமகன் வரப்பரமன் மாதுசெலக் குணமின் மூகை [ன்று
யாற்றவிடை சொலக்கருங்கண் மிதந்திடச்செய் தமிழ்மறையேயருட்பாவெ
போற்றியெவ ரும்புகழக் கோர்ட்டினின்று நாபித்த புண்யத் துக்கோ. (சு)

புண்ணியமோர் தினத்தனையு மில்லாது விளக்கெரித்தேன் புனலைக் கொண்டு, கண்ணுதலோ டினிதுகலந் தானந்த மிகக்கொண்டேன் கடின மின்றி, மண்ணுண்டார் தமையுயிர்ப்பித் தளிக்கவலேன் வம்மினென்றான் வாய்ப்பாட் டெல்லாங், கண்ணியமின் மருட்பாவென் றுயாகோர்ட்டிற் சாட்சியுடன் காண்பித் தற்கோ. (எ)

இன்னவற்று ளேதுக்கோ நினைநினைத்துப் பேதுருவே னேக்கங் கொண்டு
பன்னரிய நின்புகழிப் பார்முழுதும் பரந்துலவும் பரிசா லந்தோ
உன்னரிய நண்பினரு முறவினரு மற்றேருரு முனைக்கா ணுமே [ணு.
இன்னலுற்றுப் பொருமலுற வெங்கொளித்தா யினிக்காண்பதென்றே மன்

மன்னவனே வடிவுள்ள சிவஞானும் பிகையெனுநின் மகளு நின்போற்
பன்னரிய பாவலனும் வருமதலை மாருநின் பால ணுக
மன்னியநற் றிருநாவுக் கரசுநினை நினைத்தேங்கி வாய்விட் டப்பா
வென்றுமிகக் கதறிவிழி நீர்சொரிய வெங்கொளித்தா யேனென் ணுயோ.

கும்பமுனி யுபமன்யு வெனுஞ்சைவத் திருவாளர் கோதிற் றெண்டர்
தம்பெருமை திருக்கயிலைத் தடவரையி லினிதமர்ந்து சாற்றக் கேட்ட
வும்பரொடு சிவகணங்க ணின்வாக்கி னவர்சரித முவந்து கேட்பான் [கே.
சம்பிரமத் தோடுன்னை யழைத்திடத்தான் சென்றனையோ தண்கை லைக்

## நேரிசை வெண்பா.

ஆறுமுக நாவலர்பின் னஞ்சுமுகப் புன்மதத்த
ரேறுமுக மாகா திறக்கினன்—வீறுமுகச்
சோமசுந்த்ர னன்னேன்பின் றுய்ய கதிரைவேல்
நாமனைக்கண் டேகொண்டே நாம்.

நாமேது செய்வமினி நற்கதிரை வேற்பிள்ளைச்
சீமான் சிவபதத்தைச் சேர்ந்தனரால் --பூமேலாம்
புன்மதப்பி ரட்டப் புலவர் தலைசீட்டி
வணங்கண் மிகப் புரிகு வார்.

**கட்டளைக்கலித்துறை.**

வார்கொண்ட பூஞ்சடைப் பெம்மான் சிவபெரு மானுவந்தே
வார்கொண்ட பூவைச் சமண்மேல் விழுந்து வராதுமந்நாள்
வார்கொண்ட வள்ளி மணாளனை யேவி வளர்த்தசைவம்
கார்கொண்ட புல்லர்கள் கைப்படு மோகலங் கன்மனமே.

மனமே மஹாகதிரை வேலின் போதம்வ் வையகத்திற்
கனமேவு சைவர் சிரவணஞ் செய்து கதிர்தனரால்
சினமேவு புன்மதர துட்டரைச் சீறிச் சிதைத்திடுவர்
தினமே கவலை கொள்ளாது செய்வாய் சிவசிந்தனையே.

சிந்தனை யான்கதிரை வேலைக் கைலையிற் சேர்த்தவனை
நொந்தனை யாகவன் றேற்கிணை யாகவோர் துய்யவனே
விந்தையி னாலுலகெல்லாங் களிப்ப விதித்திருப்பன்
சிந்தா குலங்கொள வெக்காலுமச் சைவஞ் சிறந்திடுமே.



**முத்தமிழ் ரத்நாகரம் - மகாவித்துவான்**

## சைவஸ்ரீ - ம. தி. பானுகவி யவர்கள்

**இயற்றியது.**

---

**எண்சீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.**

சீரேறு சைவசிகா மணியே நீற்றின்
    றிறமேறு புகழ்பகர்ந்த செல்வா கண்டிப்
பேரேறு மறைவழியின பெருமை யெல்லாம்
    பெரிதேற மொழிந்தகலை வல்லோ யந்தோ
நீரேறு சடைமவுலிப் பெருமா னின்னை
    நிலத்தேற வையாது கயிலை யென்னுங்
காரேறு கிரியதனி லழைத்தா னேனுங்
    கண்ணேறு நீருடையேங் கவிஞர் வேகதே. (௧)

ஏருறுநற் கதிரையேற் பிள்ளை யென்னு
    மெழிலுறுபே ருடனிலங்கி யிருந்தோ யென்றுஞ்
சீருறுநற் புலவரெலா முள்ளிற் போற்றுந்
    திறமுறுத லுளதென்ப தந்தோ விந்நாள்

பேருறுவாழ் வதுநீங்கிக் கைலை யென்னும்
பேருலகி லிறைபருளாற் பெயர்ந்தா யேனும்
பாருறுவோ ரழுதிறமே பகரு நின்னைப்
பாரினீத் துறவினையார் பாவ லோரே. (உ)

**அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.**

மண்ணழுநீர் தீயழுங்கால் வானழுமேழ் கிரியழுமவ் வானோர் தங்கள்
எண்ணழுமற் றுள்ளனவா மெய்ப்பொருளு மழும்புலவ ரிறந்தா லென்னும்
வண்ணவுரைக் கிலக்கியநீ வானவர்கு ளாமணிபால் வயங்கு நிற்கென்
கண்ணழுத நீருமொரு கடலாகும் வேணிலனைக் கறுத்த தந்தோ (௩

**எண்சீர்க்கழிநெடிலடியாசிரியவிருத்தம்.**

எப்பெயர்க்கு மேற்றதிறத் தாண்மை கொண்ட
வியற்புலவ! விறைமுன்ன ரிலங்கு நீயவ்
வப்பணிக்கு பெருமானை முன்னங் காணு
மதுமுதன்மைத் திறங்காட்டு மேனு நின்னை
இப்படியெப் படியகன்று வாழு மந்தோ
வீழத்தார் தவமணியே யிறைநூ லெல்லா
மொப்பறக்கற் றேப்பயிட்ட பெரியோ யெந்நா
ளுனையினியாங் காண்பமென வுலகின் றோமே. (௪)

சிந்தனையெம் பெருமானை யன்றிச் செய்யாத்
திருவாளர் தமிலேயர் கோனை மேன்மை
யெந்தமலை நாட்டெழுந்த விறன்மிண் டப்பே
ரிறைவனைநல் வரிஞ்சையூர்ச் சத்தி தன்னை
எந்தவிதத் தும்பொருவும் பெரியோய் கல்வி
யெனுமவாறு ளெழுநிலவா யிருந்த நின்னை
யந்தரமே யிடமாச நடிக்கும் பெம்மா
னழைத்தமையி னழுத்தம்விட் டலகின் றோமே. (௫)



**சென்னை முத்தியாலுபேட்டை பன்னிருதிருமுறைத் திருவருட்பாப் பாராயண பக்தஜனசபையின் அக்கிராசனரும், பரசமய திமிரபானுவும் ஆகிய வித்துவான்**

**ஸ்ரீலஸ்ரீ - கோ. அப்பாசாமிச் செட்டியாரவர்கள்,**

இயற்றியது.

---

**அறுசீரடியாசிரியவிருத்தம்.**

தாரணி மீதி லோங்குந் தற்பர சிவத்தின் வாய்மை
யாரண வாக மங்க ளருங்கலை பலவுந் தேர்ந்த

பூரணா தங்கி வாழும் புகழின்யாழ்ப் பாணந் தன்னி
லேரணி மேற்பு லோலி யிருந்தவே ளாண்கு லத்தே. (க)

சங்கர னருளைப் பேணுஞ் சாற்றுநா கப்ப வள்ளல்
துங்கநற் றவங்கள் யாவுந் தூயவோர் குமர னாகி
அங்கவ தாரஞ் செய்தே யருங்கலை பலவுந் தேர்ந்து
சங்கையொன் றில்லா ஞானந் தத்துவ முணர்ந்த தீரன். (உ)

கற்றவர் பொலிந்து வாழுங் கடல்புடை யுடுத்த பாரி
லுற்றபுன் சமய மெல்லா மொதுங்கிடச் செய்து சைவப்
பற்றுறச் செய்து மன்றம் பலநாட்டி யோர்க ணக்கன்
சொற்றபா வினங்க ளெல்லாஞ் சோர்வுறச் செய்து நாளும். (ங)

வாதிக டம்மை வென்று வாசக முதலா யுள்ள
வோதுசீர் முறைகள் யாவு மோங்குமெய் யருட்பா வென்றே
நீதியோர் களிக்க வென்று நீள்சைவ ரேவர் தம்மை
ஆதியாய் வணங்கி யேத்து மழகுறுங் கதிரை வேலன். (ச)

பராபவ வருடந் தன்னிற் பங்குனி ரவியின் பக்க
புராதன பூர்வ பக்கம் புகல்பதின் மூன்றாந் தேதி
விராவுமா மகத்தி லென்று மொளிர்துவா தசியா நாளில்
அராமதி புனைந்தவேணி யரனடி சேர்ந்தா னம்மா. (ரு)



சதாவதானம்

ஸ்ரீ - நா. கதிரைவேற்பிள்ளை யவர்கள் மாணவரும்

சென்னை இராயப்பேட்டை

ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜனசபையின் காரியதரிசியும்

சைவப்பிரசாரகருமாகிய

## திரு. வி. உலகநாதமுதலியாரவர்கள்

இயற்றியது.

---

கட்டளைக்கலித்துறை.

கதிரைவே லைதினம் பூசை புரிந்துயர் காசினியிற்
கதிரைவே லைக்கடந் தெங்குரு நாதனற் கண்ணியனாங்
கதிரைவே லைச்சிலை தாங்கி யரக்கரைக் காய்ந்தருளுங்
கதிரைவே லைக்கடு நஞ்சுண்ட தேவைக் கலந்தனனே. (க)

நஞ்சபை வாழும் நாவல வாழ்க
அஞ்செழுத் தோது மறிஞர் வாழ்க. (கக)



உறையூர் - சைவசித்தாந்த சபையின் தனசாலை அதிபர்
## ஸ்ரீமந் - பெரியசாமி பிள்ளை யவர்கள்
இயற்றியது.

---

எனதுயிருக் குயிராய கதிரைவேற் பெருமானை
யிழந்த நாயே
னென்னினியான் புரிவதற்கிவ் வுடல்கொண்டிங் கிருப்பதென
வெண்ணி யின்னே
கொன்னவில்வெங் கூர்வாள்கொண் டுடல்போழ்ந்து வுயிர்துறக்கக்
குறிக்க கில்லேன்
கன்னவிலு நெஞ்சுடைய கடையேனுக் கிவ்வுணர்வு
கதிப்ப தாமோ. (க)

தன்னெஞ்ச மறிவதுபொய்த் தபிமானத் தால்வாதவ
சாதித் தெய்கும
புன்னெஞ்சத தவர்போலா துண்மைநெறி தலைநின்ற
புனிதர் தான
பொன்னஞ்செஞ் சடைப்பெருமா னிருவடியிற் புக்கொளிர்தல்
புகலக் கேட்டிங்
கென்னெஞ்சம் படும்பாட்டிற் கெல்லையுண்டோ விதுகண்டு
ரிரங்கா யென்னே. (உ)



சதாவதானம் ஸ்ரீலஸ்ரீ-நா. கதிரைவேற்பிள்ளையவர்கள் ஆருயிர்த்தோழராய
யாழ்ப்பாணத்துத் தெல்லியம்பதி
## ஸ்ரீமந் - தெ. அ. இராசரத்தினம் பிள்ளை யவர்கள்
இயற்றியது.

---

### கையறுநிலை.
நேரிசை வெண்பா.

ஓதற் பராபவத்துச் சேர்மீன மாமதியி
லார்த்தபதின் மூன்றுபௌம ஞாயிரண்டில் - வாய்த்ததிசி
நாவலர்கள் போற்றுமெங்கள் நற்கதிரை வேற்பிள்ளைப்
பாவலன்பார் நீத்தான் பகர். (க)

## கலிவிருத்தம்.

அண்டர் போற்றிடு மம்பலத் தாடிய
வண்டர் ரேத்திட வாத வரன்றனைத்
தொண்டு பூண்ட தொழும்பனென் வேலனைக்
கண்டு நெஞ்சம் களிக்கட லாடுமால. (அ)



சதாவதானம்

## ஸ்ரீலஸ்ரீ - நா. கதிரைவேற்பிள்ளை யவர்கள் மாணவரும்,

சைவப்பிரசாரகருமாகிய

## ஸ்ரீமந் - சோமசுந்தர முதலியாரவர்கள்

இயற்றியது.

---

### நேரிசை வெண்பா

மண்ணும் பராபவசர் வற்சரமா மின்மண்ணும்
பண்ணும் பராபவசம் பற்றுடையான் — எண்ணும்
குருக்கதிரை வேற்புலவன் கொண்டனன்பே ரின்பத்
திருக்கதிரை வேற் புலவற் சேர்ந்து. (க)

### எழுசீர்ச்சந்த நெடிலடியாசிரிய விருத்தம்.

வளம்பெறு திருக்கேதீச்சரங் காண மேவியொடெஞ் சம்பந்த மூர்த்தி, உளங்கொள் பதிக முரைத்தருண் மேன்மை யுறுதலங் களையுடைத்தான, தளம்பெறு மீழ நாட்டினிற் புலவோர் தழைத்தொலித் தலாற் புலோலியெனு, விளம்புறு பதியிற் பண்டைநற் றவத்தான் மேழியா ருலத்திலவந் துதித்தே. (உ)

அத்திருப் பதிக்கண் ணெழுந்தருள் புதுச்சந் நிதிக்கந்த னடியிணை தொழுது, மெய்த்திருத் தவங்கள் விதிப்படி புரிந்தே விளங்குநாள் காசிப மேலோர், கொத்தூற் றவத்தின் பயனென நகரா வுபாசிவ ஞானசன மாக்க, மெய்த்திசை யினும்போயப் பாரிலே விளங்க விளங்கதி ரோனென வுதித்தோய்! (௩)

உதித்தது மே யிளமை யிரகமெலன் றெள்ளவை யுரைத்தனை முதுமொழிப் படியே, பதித்தவீ றொண்பான வயதிலவணை முறைமைய பகரிலக் கணவிலக் கியமாக, கதித்தநூ லனைத்துஞ் சட்டறப் பயின்று கருத்துமெய்ஞ் ஞானநூன் முழுதும், விதித்தனை மரபாற் சொல்லியுணர்ந் திவணீ விளங்கினை கதிரைவேன் மேலோய்! (௪)

முற்றுமோ ராறிய வுயரடி யாகவும்
வாழிய வாழிய வாழிய வாழிய
பெருநில மடந்தைக் கொருமுக மெனவொளிர்
தருமே யீசரந் தருதிருக் கோண
மலைகதிர் காம மருவியே யிலங்கு
மீழநன் னாட்டி லெழில்பெறும் புலோலி
வாழவந் துதித்தே வயங்கே தைந்திற்
றிருவாத வூரர் சேர்மக தினத்திற்
கருவாதை நீக்கிய கதிரைவேற் புலவன்
வாழிய வாழிய வாழிய வாழிய
சைவத் திருமுறை தழைத்தெழுந் தோங்கத்
தெய்வத் திருவிழாச் சிறப்புற நிறீஇய
நற்றவன் வாழ்க நலமுடன் பலநா
ளுற்றவென் போல்வார்க் குணர்த்தினோன் வாழ்க
விரிவக ராதி விளங்கிய சொற்களைத்
தெரிவக ராதியாய்ச் சீர்பெறத் திருத்தி
யியற்றமிழ்ப் புலவோ ரிரும்பூ தெய்தக்
குயிற்றியே யெமக்குக் கொடுத்தோன் வாழ்க
கூர்ம புராணக் குறிப்புரை தெரிந்து
பார்மிசைப் புலவோர் பயன்பெறு மாறு
நல்லுரை யியற்றி ஞாலமீ தளித்த
வெல்லருஞ் சாத்தி விறலோன் வாழ்க
சூதிகன் டிகையின் பொருணனி தெரிதந்
தீதியாய்ச் சைவ நெறியெலாம் விளங்கச்
சைவ பூஷண சந்திரிகையெந் தனிநூல்
செய்தெமக் களித்த திறலோன் வாழ்க
திருவா சகந்தே வாரமே முதலா
வொருவாத நூல்பல வுவப்புட னிலக்கி
வித்தக வடிபார் வியப்புறப் போலி
யருட்பா மறுப்போ டதனைவழித் தான
மருட்பா மறுப்பு வண்கதிர் காமக்
கலம்பகம் பௌத்த கண்டன முடன்பிர
புலிங்க லீலை புகலிட தவுரை
சிவக்ஷேத் திராலயச் சிறப்புமெய் விளக்கம்
தவக்ஷேத் திரைகா தபுரா ணஞ்சுப்
பிரமணி யபராக் கிரமம் பெருமைசேர்
கருவூர் மான்மியங் கந்த புராண
சாரச் செய்யு ளாயுமா னவருடன்

பட்டினத் தடிகள் பழையமான் பயவுரை
இட்டமா யின்னன வினமபல நூல்கள்
புதுக்கியு பயறரியும் புத்துரை யெழுதியு
மதிக்கவீண் டதநல் வள்ளல் வாழ்க
அன்னவன் கீர்த்தியு மழிவிலாப் பதவியு
மெனஞேன் புறுமா வியல்புடன வாழ்க
மற்றவன பாற்கலை கற்றமா ணவாகளு
முற்றாண் பேயசு வுயிர்போ லேயரு
மவணிவ ணி இய தவ நெடுமா சபைகளு
சிவன ள ளாமே செழித்து வா ழியவே. (கஉ)

—oo:○:oo—

## சென்னை இராயபேட்டை
## ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜன சபை உபகாரியதரிசியும்
பச்சையப்பன காலேஜ் தத்துவவிசாரணை சங்கத்து
(Philosophical Association) காரியதரிசியுமாகிய,
## ச. சச்சிதானந்தப்பிள்ளை யவர்கள்
இயற்றியது.

---

### எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

சைவமெ னும்பயிர் தாரணி மீதுத ழைக்கச் செய்த தன்னியனே
நைவடை நதயம் நண்பொரு டம்மமா யக்கச சொல்லு நாவலவோய்
மைவனக் கந்தன் மெய்யடி யாரகண்ம னத்தில் வதியு மாமணியே
வுய்வது முண்டுகொ லோவடி யேங்களு முன்னை யிழந்து முயிர்போல்வாய.

முத்தனு முத்திய ளிரதருள் செய்முழு முதல்வோ னெமமான முக்கணனைப்
பித்தம னததுட னெரதிய வைணவா பின்னரிட் டோடப் பிளந்திட்டாய்
கத்திய புத்தரின் சத்தைய டக்கசி கண்டாய் சண்ட னநகடிதிற்
சுத்தந லறிவினா மெச்சிடு புலவனின் சூரன் சிரியேன சொலியாமோ. (உ)

இன்னொரு கடவுள ரெமயிலு மேலவ ரெனுநா கங்கட் கிடியொத்தாய்
மன்றன்ம திச்சடை யான்புகழ் பேசுறு மாமுறை பததொ டிரண்டல்லா
லென்றெவர் பாவும ருட்பா வாகுத லின்று மெனறே யிருத்தனையாற்
கன்றுத லின்றுந ரும்புக ழென்றுங் கதிரை வேலோய் காசினியில். (ங)

முன்னொரு காலையில் காழியில் வர்தருள் முனிவோன் மற்றை முதல்வோர்கள், பன்னரு மாண்புடை நஞ்சம யம்பரி பாலித் தாரப் பண்பேபோ, லின்னல்க ளெண்ணில துன்னியு மேங்குத லின்றே சைவ பிரட்சித்தா, யுன்னரு மைத்திற முயர்குண நகொண்டெவ ருறுவா ரினியா ருரையாயே

தமிழுடை நந்தமிழ்ச் சலநிதி யுண்டெழு தபனந் தீர்ந்த தனிப்பேறே, யமிழ்தையு மட்டிடு பொருள்கள்சு வைக்குமருங்கவி பொழிபே ரம்புதமே, தமிழ்மொழி முன்னுறல் வேண்டுமென றுனனிய தமிழ்மா மகளின் றலை மகனே, இம்ழ்திரை வேலைகொள் புவியினி நின்னையி றந்திம் மாதென் செய்வாளே (௫)

கலிநிலைத்துறை.

சொல்லாய் நீசொல் சான்றவர் செய்யுந் தொழிலாய்நீ
வல்லாய் நீசொல் நான்மறை யாகம வளநூலி
னல்லாய் நீயுண் மைச்சிவ னடியார் நாவிலெனக்
கெல்லா நீயே யென்றும நிற்றே னென்செய்கேன (௬)

எளியார் தங்கட் கெளிமைய ருங்கி யியல்வோய்நீ
களியார நின்பால் வருகொடு பகைகளுக் கரிகடேசா
வளியார வலிகொ ளரியெண வுருவாய் வள்ளாமீ
தளியா ரறிவோய் கதிரைவே லோய்நிற் கழகன்றே. (௭)

எழுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

அவதரணஞ்செங்க ம்துவே யெனப்ப லறிவோர துதிக்கு மரசே
சிவசா கரத்துண் முழுகிக் கொணர்ந்து சிவருநா ணவம்பு சொரிவல்
பவமாம் வெயிற்க ளுலராப் பயிர்க்கு நிகரா மெமக்கு மழையே
யவமாய்த் தவிக்க வெமையே விடுத்து மமரவானில் புக்க தழகோ ? (௮)

தென்றே டுமுன்ன விந்நா ளுதித்த திறல்கொண் டதேவ வருளோய்
நின்றே டிசைந்த தொருநா ளதேனு நினைவின் மறக்க வசமோ
மன்றே வுன்பாதம் பன்றேட் பணிந்த மாபா வியான வுரியே
னென்றே புகன்றென் றுயரா றுயேனிங் கெந்தா யுனைப்பிரிந்தே (௯)



பச்சையப்பன் கலாசாலைத் தமிழ்த்தலைமைப புலமை நடாத்திய வித்துவான்
ஆ. சுப்பராயப் பிள்ளை யவர்கள் பௌத்திரன்,
ஸ்ரீமந் - ஆ. ச. தமாரவடிவேல் பிள்ளை யவர்கள்
இயற்றியது.

---

அறுசீர் விருத்தம்.

மாவளமார் கலியையா யிரத்தேழில் பரபவமா வாணடு மீனம
தூவளமார தேதிபதின் மூன்றுரும் பூர்வபக்கச் சுத்த மான
பாவளமார் துவாதசியார் மகத்திழ நாடுதித்த பாவல் லோனும்
நாவளமா கதிரைவேற் சரபங்கை லைதன்னை நண்ணு நாளே. (௧)

### கொச்சகக்கலிப்பா.

நீறுகண் டிகை விடய நீணிலத்தி லியாவருக்குங்
கூறுமெய் விற்பன்னர்க் குரவனே சிவபெருமான்
வீறுதனை நாட்டியதோர் வித்தகனே யடியனேற்
காறுதலை யெக்கால மணுபடமே பன்னுவையோ (௨)

### கலிவிருத்தம்.

சதிரான மெய்ச்சமயஞ் சைவ மென்றே
கதிரவன்போ லிவ்வுலகிற் களிப்புண் டாக்குஞ்
சதிரைவே லவலனார் கைலை யுற்றார்
முதிராத புலவரெலா முன்னே நிற்பார். (௩)

### கட்டளைக் கலித்துறை.

நாட்டுநல் வித்த மறவழி நாட்டி யிருவினையும்
ஓட்டுநல் லாசான் கதிரைவேற் பிள்ளை யுரவணிசை
நீட்டுமெய் யைக்கொண் டெற்சுமைப் பாற்றுஞ் செழுங்கலையர்
கோட்டியில் வேண்டிடச் சீர்ச்சிவ லோகங் குறுகினனே. (௪)

—oo:o—

சென்னை, ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜன சபையின்
நிருவாக சபையினருள் ஒருவரும்,
சதாவதானம்
ஸ்ரீலஸ்ரீ - நா. கதிரைவேற்பிள்ளை அவர்களின் மாணவருமாகிய

## அ. சிவசங்கரமுதலியா ரவர்கள்

இயற்றியது.

---

### நேரிசைவெண்பா.

பொன்னைப் புதல்வர்களைப் பூவிலுள்ள வெப்பொருளை
மன்னைப் பெறலாகு மாதவனே-யுன்னைப்போ
லலர் குருவை யென்றடைவே னிப்பிறப்பி லென்னுயிர்
பேர்கதிரை வேலவனே பேசு. (௧)

### கட்டளைக்கலித்துறை.

சண்முக னூர்பெயர் சாற்றவுங் கல்லாச் சழக்கனனைச்
சண்முக னார்சபை சேர்த்தருள் ளீந்த தனிக்குரவ
கண்முக னாடி கண்டனை யிங்குக் கலங்கவிட்டு
மண்முக மேலினி யாருள ரென்மயல் மாய்ப்பதற்கே. (௨)

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

சென்னி நாடற் சிவனைவின்று சிவனு ரடியா ரகங்களிப்ப
பன்னி ரண்டு திருமுறையாம் பரம னருட்பா வுற்சவத்தைப்
பொன்னி நாடும் பிறநாடும் பொலிய புரிந்த புண்ணியநின்
மன்னி யிலங்கு நறுஞ்சீர்த்தி மலரு முலகில் மணக்குமன்றே. (ரு)

தந்தை தாயா ருடன்பிறந்த தமையன் சுற்றந் தம்முழ்வீசு
நிந்தை யில்லா நெறிக்குரவன் நீதி யன்பர் நீயென்றே
சிந்தை பதித்த சிறியேனைச் சிறிது நோக்கஞ் செய்யாதே
யெந்தைக் கயிலைக் கெழுந்தனையா லேழை யிங்குச் செய்வதென்னே.

### கொச்சகக் கலிப்பா.

சிவசமயஞ் செழிப்போர்கள் செகந்தனிலே பலரெனினும்
அவசமயப் பேய்கள்வரி னகங்கலங்கி யவர்வழியே
தவசமய மெனவுரைத்துச் சைவச்சீ ரழிக்கின்றார்
சிவசமய முனைப்போலச் செழிப்போர்க ளினியாரே. (சு)

உனையன்றி யொருவரையு முயர்குருவாய்க் கொள்வதிலை
யெனவுரைத்த வென்மொழியை யிருவிசும்பிற் கரந்திருங்கி
மனமகிழ்ந்து சோதிக்க மறைத்தனையோ திருவுருவைக்
கனதனத்தை மதியாத கதிரைவேற் கண்மணியே. (எ)

### நேரிசை வெண்பா.

சங்கரனு ரின்னருளாற் சம்பந்த ராதியோ
ரிங்கீந்த நன்முறையி னின்பொருளைத் - துங்கமிகு
தொல்லுலகிற் சொல்லிச் சுரலோகத் தூயோர்க்குச்
சொல்ல வெழுந்தனையோ சொல். (அ)



சதாவதானம்

ஸ்ரீலஸ்ரீ - நா. கதிரைவேற் பிள்ளை யவர்களின் மாணவர்

## சைவஸ்ரீ - மா. நீலகண்டமுதலியா ரவர்கள்,

இயற்றியது.

### நேரிசை வெண்பா.

மின்னும் பராபவநன் மீனமதி யாமதனில்
மன்னுகுச னுளன் மகமதில் - இன்னாசீர்
கந்தவேட் டொண்டன் கதிரைவே லுவலவன்
கந்தன் கழலுற்றான் காண். (க)

## இன்னிசை வெண்பா.

அகனார் தளக்காசு சூழும்புவியி னுன்ற
புகரில் புலவராம் புண்ணியர்கள் போற்றுங்
குகனுங் குருபரனெங் கோனடியுற் றானம்
அகனுர் கதிரைவே லன். (உ)

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

செருவினிற் சூரைச் செற்ற தேவனற் சேனை கர்த்தன்
திருவினைத் தம்பிய னுக்குத் திருத்தமா யெடுத்துச் சாற்றும்
பொருவரு புலவர் போற்றும் புண்ணிய புருடா வுந்த
னிருமல ரடியென் னுள்ளத் திடைவிடா திருத்தி னேனே. (௩)

## வேறு.

கல்லைப் போன்ற கடியமனங் கள்ள வுள்ளங் கருமையுற்ற
அல்லைப் போன்ற வஞ்ஞான மகங்கா ரமுமே யான்கொண்டே
அல்ல லுக்கே யாளாகி யலையு மமயத் தவைபோக்கிச்
சொல்லற் கரிய சுகப்பேருஞ் சுடர்க்கொ ழூர்தைச் சுட்டினையே. (௪)

## வேறு.

ஞானசத்தி கைத்தலத்தி லுற்றவனே நாதனென நம்பி னேனை
ஞானசித்தி யித்தலத்தி லுற்றுய்ய நாதனென நம்பி நானுட்
ஈனபுத்தி யிற்றுயுத்தி யிற்றகத்தே யிறைவனென வேததிப் போற்றி
மோனமுத்தி முற்றவெற்றி யுற்றிகத்தே முறையாக முன்னு வேனே. (௫)

## நிலைமண்டில வாசிரியப்பா.

மேதவா ரமபுகழ திருத்தலந் திகழும்
நாவாய் நீந்து நல்லீழ நாட்டில்
யாதனை யகற்றும் யாழ்ப்பா ணத்தில்
மேதையர் மேவு மேலைப் புலோலியுள்
கலியுக வரதனுங் கந்தன் மரீஇய
உலக ருகக்கு முபய கதிர் காமம்
புலவர் போற்றும் புதுச்சந் நிதிக்கு
நவுந்திகழ் தரும கர்த்த னுகப்ப
வேளாண் மகிபன் விருப்புட னீன்ற
காளை யெங்கோன் கதிரைவே லுவலன்
பதிற்று மூன்றுடன் பயில்மூ வைந்தில்
சதியாங் கந்தனைக் கலந்தன னென்னே! (௬)

### கட்டளைக் கலிப்பா.

வாத மிட்டவம்பர் வாடவே நல்ல
 வாத மிட்ட வசையற்ற நன்மாயா
வாத தூம்சகோ ளரிமருட்பா மால்
 வாதத்தால் மறுத்திட்டமா வள்ளலே
நாதார் தத்தி னடம்பு நம்பன்சீர
 நன்கு நாட்டுஞ்சித் தாந்தமாசரபம்
வேதாந் தத்தியல் பின்னதெனச் சாற்றும
 வித்தகனேசற் சதாவதானியே. (௭)

### கலிவிருத்தம்.

கதிர்கா மததுங் கந்தன கழல்வாழி
கதிர்கா மததுங் கந்தன் கழலடை
கதிர்கா மததுக் கதிவேரயே லனைவாழி
கதிர்கா மத்தைக் கருதுவோர் வாழியே. (௮)

---

மாயாவாத துமஸ கோளரி

சதாவதானம்

ஸ்ரீலஸ்ரீ-நா. கதிரைவேற் பிள்ளை யவர்களின் மாணவரும்,

சென்னை சிந்தாதிரிப்பேட்டை வேதாகமோக்த சைவ சித்தாந்தசபை-

யடியவரு ளொருவருமாகிய

செ. சச்சிதானந்த முதலியார்

இயற்றியது.

---

### அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பெண்ணொரு பாகர் வாழும் பிறங்கலை நீத்து நால்வர்
பண்ணவி ரருட்பாச் சீர்த்தி பாரினிற் பரப்பி நாட்டப்
புண்ணியப் புலோலி யென்னும் பூம்பதி வந்த கோவே
நண்ணிய வென்னை விட்டு நல்லூருக் கரந்தா யென்னே. (௧)

கனவிலு மென்பேர் சொல்லுங் கண்மணி கதிரை வேல
நனவினி லென்னை மறந்து நண்ணலர் புரங்கள் செற்ற
கனகமா மேரு வில்லிக் கழலடி கலந்தா யிங்ஙன்
கனைகட லுலகி லிந்தக் காரிய மழகோ கூறாய். (௨)

டிக் கன்புசெ யன்பர், புண்ணியர் நட்பே புவியிடை வேண்டும் பொரு ளெனக் கொண்டனன் மன்றோ. (ய)

---

சென்னை, இராயப்பேட்டை ஸ்ரீபாலசுப்பிரமணிய பக்தஜனசபையின்

கணிதபரிசோதகர்

## புதுவை - கல்யாணசுந்தர முதலியார்

இயற்றியது.

---

### நேரிசை வெண்பா.

செந்தமிழே யெஞ்ஞான்றுஞ் சேடியருஞ் செப்புமொரு
கந்த னபய கதிர்காமம் - தந்தசுத !
நங்கதிரை நாயகனே நாளு முறைவதற்கோ
சங்கரனு ரினனடிசார்ந் தாய். (க)

### கொச்சகக் கலிப்பா.

மன்னதனை விழைந்திட்டே மலர்ந்தறியா யொருகவியும்
பொன்னதனைப் பொருட்படுத்திப் புகழ்ந்தறியா யொருவரையும்
என்னகுறை செய்தனமோ யெழிலிழந்த தமிழ்மாக்கள்
மன்னகவி யுனைப்பிரிந்தே மனங்கலங்கி மயங்கிடவே. (உ)

சிவசமயத் திருமுறைகள் சிறப்பழிக்கச் சிறுகணக்கர்
அவசமயந் தனிற்கிளம்ப அவர்கெடுத்த ஆண்டகையே
அவனியுளா ரொருபவமோ அவமதனி னொருதவமோ
இவர்ந்தேநீ புகழிரதம் இவ்வுலகை யகன்றதுவே. (௩)

நாங்களெலாஞ் சிறியவர்கள் நலம்பலவு மையயாதார்
பாங்கெமக்கு வழங்காது பரந்திட்டீ ருலகிருந்தே
ஈங்குகளோர் தமிழதற்குத் தீயவர்க ளிழைத்திட்டால்
ஏங்கிமன மிளைப்பதலா லெளியேங்கள் புரிவதென்னே. (ச)

கங்காள னிருபாதங் கதியெனவே யடைகதிரே
இங்காள யெழுமுயற்சி யெழில்வேலே யுன்றுணையை
இங்காள வேண்டுமென யிவணுறுங்கா லேகினையே
வங்காளப் புலவரைப்போல் வார்த்தையினிற் பெரியோனே. (ரு)

மன்றாடி மணப்படியே வளாகயிலை யடைந்திட்டாய்
என்றாலு மெங்கள்மன மிரங்குதலை யொழியவிலை
குன்றாத புவியதற்குக் குணமிக்கார் வேண்டுமையா
மன்றாடிக் கேட்டிடுவாய் மனங்களிக்கச் செய்திடவே. (சூ)

சதாவதானம்-ஸ்ரீலஸ்ரீ-நா. கதிரைவேற்பிள்ளையவர்கள் மாணவரும்

சென்னை இராயப்பேட்டை ஸ்ரீ பாலசுப்பிரமணிய பக்தஜன

சபை நிர்வாகசபையாரு ளொருவருமாகிய

## திருவாரூர். வி. கலியாணசுந்தரமுதலியா ரவர்கள்

இயற்றியது.

---

### கலிவெண்பா.

மாதவனும் வேதியனும் வானவருந் தானவரு
மாதவரு மானுடரு மற்றவரு—நாதவென
நின்றுதுதி நின்மலனா நீட்சிலைமா மேருவெனுங்
குன்றததி னோமுடியாங் கோணவரை—நன்றிபெறு
நீதிநூல் வல்ல நிபுணர்வாழ் கேகீச
மாதிதிரு வாலயங்க ளாங்காங்கே—சோதியா
யோங்கிமிழ நாடதனி லொப்பில்வேற் சந்நிதிவேள்
பூங்கந்த வெற்பொத்த பொற்கோயில்—தாங்குமொரு
மேலைப் புலோலியெனு மேலோ மொழிபதியி
னாலாங் குலம்புரிந்த நற்றவமுஞ்—சீலமிகு
தென்னாடும் பொன்னாடுஞ் செந்தமிழு மாரியமு
மென்னாடுஞ் செய்தவமு மேகியொன்றாய்—மன்னாடு
நாகப்பர் நற்றவத்தி னுண்மறையின் சீர்விளங்க
வாகமவாய் மைவிளங்க வாரியையோர்—பாகரு
ளோங்கு திருமுறையி னுண்மையெல் லாம்விளங்கப்
பாங்குறு சூதன் பகர்முதுநூல்—ஈங்கொலிக்க
வெள்ளை விடையுறும் வித்தக னாரடியா
ருள்ள முவப்ப வுதித்தோனே!—வள்ள
லறக்கொடியோன் போன்ற வருட்குருவை நண்ணிப்
பிறப்பொழிக்குந் தீக்கையெலாம் பெற்றோய்!—துறந்தோர்சொல்
நல்லைநக ராறுமுக நாவலர்தம் மாணவர்பாற்
சொல்லுதமி ழாரியநற் றொன்மொழியில்—வல்லோர்செய்
கோதி லிலக்கணமுங் கூறு மிலக்கியமு
மோதிமய னீங்க வுணர்ந்தோனே!—நீதிமிகு
சென்னைமா நன்னகர்க்குத் தீயே மிருளொழிக்கத்
துன்னுகதி ரோனெனவே தோன்றியவா!—நன்னீறுங்
கண்மணியாங் கண்டிகையுங் கண்ணன் றரித்தொழுகு
முண்மை விளக்கு முயராழ்வார்—வண்மைமிகு
வாய்மொழிக்கு மாறாக வாதந் தொடங்கியபல்
வாய்மையிலா வைணவர்தம் வாயடக்கித்—தூய்நீற்றி

ணுண்மை யவரறிந்தே யுய்ய மறைவிதிக
டிண்மையாய்க் காட்டுக் திறலோனே! —மண்முகத்தி
னற்றவத்தோர் போற்றுமெழி ஞயகரா நால்வரருள்
வெற்றியருட் பாவோதும் வித்தகரே—குற்றமிலாத்
தந்தைதாய் சுற்றந் தமய னெனக்கருதிப்
பந்த வினைகளெலாம் பற்றறுத்தோய்! —சந்ததமு
நாங்களை தெய்வமெனுஞ் ஞாலக் கரிகளெலா
மேங்கியழிந் தோட வெதிரேறி—யிங்குப்
பிரசங்கக் கர்ச்சனைசெய் பேரரியே றென்றே
யரசாங்கத் தாரபுகழ்ந்த வண்ணல்! —தரையின்மிசை
யத்துவித சித்தாந்த வஞ்சமயத் தாபகனென்
றுத்தமர்கள் போற்ற வொளிர்ந்தோனே! —புச்சமதப்
பித்தா விடுத்த பிழைமலிந்த நூல்களையெங்
கத்தனடி யார்களிக்கக் கண்டழித்தோய்! —அத்தியணி
யண்டர் பிராற்கினிய வந்தமிழெ னுங்கடலை
யுண்டமுதத் தோரு நயர்ந்தோனே! —பண்மொழியா
ளங்கயற்கண் ணம்மை யரசுபுரி மன்மதுரைச்
சங்கப் புலவத் தனிமணியே! —யிங்குள்ள
சுந்தர மாணவர்க்குத் தூயதமி ழின்முதைச்
சந்ததமு மூட்டுநற் சற்குருவே! —சுந்தரனார்
சாத்திரத்தி னுட்பொருளைத் தாரணியி லன்பருக்கு [காக்கு
மாத்திரைக்குட் சொல்லவல்ல மாண்புடையோய்! —நாத்தி
நாதன் சிவனெனவே நாட்டி யவர்முகத்திற்
பூதி யணிந்தாண்ட புண்ணியனே! —கோதினர்சம
பாக்களருட் பாவென்னும் பாமரர்தங் கொள்கைகளை
மாக்களுய்ய வேரறுத்த மாதவனே! —வீக்கநதா
நீதித் தலத்து நிறுத்திய வக்காலே
நீதி பலகூறி நீசாது—வாதம்
பரிதிப் பனியெனவே பற்றறுத் தீராறுய்
விரிந்த வருண்முறையே மேன்மை—யருட்பாவென்
றெம்பெருமா னன்பரெலா மெங்கணுமே போற்றிசெய
வும்பர்கள் வாழ்த்த வுறுதியாய்—வம்பில்லா
நீதி பதிவியக்க நேராக மேல்விதிகள்
சோதி யெனச்சொற்ற தூயோனே! —கோதிலாத்
தில்லைதிருக் காஞ்சி சிராப்பள்ளி தேவைநகர்
செல்வமலி சென்னை சிவனெங்கோ—னல்லதிரு
வாலயங்கண் மன்னு வரும்பதிக ளில்வாழுங்
கோல மிகுவடியார் கூட்டமாச்—சீலமொ

டன்றுநின் பாலேகி யன்புடனே வாழ்த்தியொரு
வென்றியெமக் கீந்த விறலோனே ! —வென்றுன்னைத்
தத்தம் பதிக்கழைத்துத் தங்க விமானமதிற்
றத்துவ வின்னருட்பா தாபித்துச்—சத்தியமாய்
வேதியரும் வாழ்த்தியதை வேழத்தின் மீதிருத்தி
வீதி வலம்வரவே வேழம்பி—ஞதியடி
யார்குழுவி லாறுமுக வண்ணலெனக் கைகூப்பிப்
பாருளோரா போற்றிசைத்துப் பண்பாடச்—சீராக
வஞ்செழுத் தோதிவாத வன்பரசே! யம்பலவன்
செஞ்சொல்லே தாந்தத் தெளிவாகு—நஞ்சைவச்
செஞ்சாலி யோங்கச் செழும்பிர சங்கமழை
யஞ்சா துபொழி யருண்முகிலே ! —செஞ்சடையான்
றொண்டர் பெருமையெலாஞ் சொல்லச் சுவசனைக
ளண்டத் துறச்செய்த வாண்டகையே ! —கண்டோர்
கருவூர்த னீக்குங் கருவூரிற் சின்னாள்
கருவூர்த னீக்கக் கருதிப்—பெருமானை
யுள்ளத்தாற் பூசித் துறுபாசம் வீட்டி நின்ற
வெள்ளலிலா நல்ல வெழின்முனியே ! —புள்ளிமயிற்
செல்வன் றிருவருளாற் சென்னையினிற் செந்தமிழ்மாக்
கல்வி சிறந்த கவிஞரா—நல்லோர்மு
னோர்நூ றவதான முண்மையாய்ச் செய்துபுகழ்
பாரில்விரித் தோங்குவித்த பண்போனே ! —யேர்க்குந்த
சீல வருணகிரிச் செந்தமிழ்ப்பா பெற்றுள்ள
நீலகிரிக் குன்றூ ரினின்மலனே—நீலகண்டன்
செம்பொ னடிக்கன்பு செய்கணங் கள்கொணர்ந்த
வம்பொன்றே ரேறியுண்மை யன்பரெலாம்—வெம்பிநிற்கக்
கற்றோர் கதரக் கலைவாணி மேவியழச்
சுற்றத்தார் சூழ்ந்திரங்கச் சோதரனும்—பெற்றவனும்
வாய்கொட்டி வீழ்ந்தழவே வாடா வுளத்தரழத்
தாயிழந்து பாரிற் றவிக்கின்ற—சேயெனவே
யெஞ்சவையு மற்றனவு மேங்கியழ வேதமிலா
னெஞ்சரு நேயரு நின்றிரங்கத்—தஞ்சமென
வந்த வரைக்காக்கும் வண்கதிரை வேற்புலவா !
தந்தைதா யில்லாத் தனிமுதலா—யந்தமு
மாதியு மில்லா வரும்பெருஞ் சோதியாய்
வேதவே தாந்த விரிபொருளாய்ப்—போதமாய்ப்
பெண்ணு ணலியாய்ப் பிறப்பிலியாய்ப் பேசரிதாய்
மண்ணீ ரனற்காற்று வானாகி—யெண்ணரிதா

யொன்றிரண் டென்றாத வோங்கொளியி லொன்றினையா
லென்றுமையாங் காண்பே மினி. (க)

## நேரிசை வெண்பா.

மெய்யருட் பாவெங்கே மெய்கண்ட நூலெங்கே
தெய்வீக நீறெங்கே செந்தமிழின்—மெய்யெங்கே
கந்தனடி போற்றுங் கதிரைவே லாவலநீ
யிந்தநிலந் தோன்றாயே லிங்கு. (உ)

உண்போ விலக்கணமு முண்மை யிலக்கியமு
ளென்ஞான நூல்களுந் ஞாலத்தி—லென்றனக்குச்
சத்தியமாய்ப் போதிக்குஞ் சற்குரவர் வேறில்லை
பித்தனே னென்செய்வல் பேசு. (௩)

சங்கரனைப் போற்றிநிதஞ் சாக்கியரைக் காய்ந்துமன்னர்
சங்கந் தனைநண்ணிச் சார்மசத்தி—லங்கயிலைப்
புக்க கதிரைவேற் புண்ணியனைப் புன்னெஞ்சே
யிக்கால வாசகனென் றேத்து. (௪)

## கட்டளைக் கலித்துறை.

மேலைப் புலோலி யெனும்பதி மேவிய வேலவனார்
காலைக் கதியெனக் கொண்ட கதிரைவேற் கண்மணிநீ
மாலையோர் பங்கன் மலரடி மன்னினை மற்றினியார்
வேலை நிலத்தெழி லால்வர்தஞ் சீரறை வித்தசரே. (௫)

சங்கரி கந்தனை யாள்பதிச் சங்கத் தனிப்புலவ
சங்கரி கந்தனைச் சூடரன் றாண்மலர்த் தங்கினையாற்
சங்கரி கந்தனை யேறெங் குமரனார் தாரகனைச்
சங்கரி கந்தனை யெஞ்சபை நாதன் சகத்தினியே. (௬)

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

தென்னாட்டுச் செந்தமிழே சிவநெறியோர் தவநெறியே
திருவே தேனே
யிந்நாட்டுப் புலவருக்குத் திருமுறையி னுண்மையெலா
மெடுத்துக் காட்டிப்
பொன்னாட்டுப் புலவருக்குப் போதிப்பான் போந்தனையோ
புலவ ரேறே
மன்னாட்டு முனக்கினிய குகச்சபையை மறந்தேகல்
வழக்கோ சொல்லாய். (எ)

முன்னாளி லெக்குரவற் கென்னபவஞ் செய்தேனோ
மூட னாயே
னிந்நாளி லிளமையிலே யுனையிழந்து வாடுகின்றே
னெந்தா யெந்தா
யெந்நாளி லுனைக்காண்பே னெழின்முகத்தைக் காட்டாயோ
வெங்கே சென்றாய்
மன்னுவோ மன்னுவோ மாநிலதது மாணவரை
மறந்தாய் கொல்லோ. (அ)

"எத்துயர மணுகிடினுங் குருபத்தி தவறாத வெழிலோ" யென்று
"நத்திடும்யாப் பியல்பயிற்றும் பயனதனை யொருபாவி ஞட்டி வாழும்
உத்தமநற் சுகுணத்தோய் கல்யாண சுந்தரப்பே ருற்றோ" யென்றுஞ்
சத்தியனே யினியெனக்குக் கடிதங்கள் விடுப்பவருஞ் சகத்தி லுண்டோ.()

ஜெனனதினம் - கட்டளைக் கலித்துறை.

போபிர சோற்பதிப் பீடுறு மார்கழிப் பேசிருநான்
கார்பிர கற்பதி வாரமுற் பக்க லைப்பிசியிற்
சீர்பிர சங்கம் பொழிகதி ரைவேற் சிறப்புடையோன்
சார்பிர மன்றரு வாகடற் றாரணி சார்ந்தனனே (௰)

திருநக்ஷத்திர வெண்பா.

பன்னு பராபவதத் பங்குனிப்ப தின்மூன்றில்
மன்னுமுதற் பக்கஞ்சேர் மாமகத்தில்—மின்னு
கதிரைவே லன்றாதைக் கான்மலர்க்கீழ்ச் சேர்ந்தான்
கதிரைவே லவலவன் காண். (௰௧)

—oo:✱:oo—

சதாவதானம்

ஸ்ரீலஸ்ரீ - நா. கதிரைவேற்பிள்ளை யவர்கள் மாணவரும்,

பரசமய திமிரபானுவாகிய வித்துவான்

ஸ்ரீமந் - கோ. அப்பாசாமிச்செட்டியா ரவர்கள் குமாரரும்,

சென்னை முத்தியாலுப்பேட்டை பன்னிரு திருமுறைத
திருவருட்பாப்பாராயண பக்தஜனசபைக் காரியதரிசியுமாகிய,

கோ. அ. திருஞானசம்பந்தச் செட்டியாரவர்கள்

இயற்றியது.

---

நேரிசை வெண்பா.

கந்தன் றிறமெங்கே கண்டிகை நீறெங்கே
பந்தமொழி நல்லருட் பாவெங்கே—நிந்தையிலா

வுண்மைநெறி யெங்கே யுயர்கதிரை வேற்குரவன்
மண்ணில்வா ரானேல் மகிழ்ந்து. (௪)

## கலிவெண்பா.

பொன்பூத்த மாமேரு பொன்முடிக ளம்முளொன்றுங்
கொன்பூத்த கோணவரை கோதிலா—மன்பூத்த
கேதீச மாதிதிருக் கேடிற் சிவதலங்கள்
சோதியா யோங்கீழ நாட்டில்—வேதியர்வாழ்
மேலைப் புலோலியொளிர் வேளாண் மரபுதித்து
வேலை சுவரவொரு வேல்விடுத்தோன்—காலை யென்றும்
பூசிக்கு நல்லடியார் பொன்னடியைப் போற்றியரி
நேசித் தணிவது நீறென்றே—பேசியிவண்
நாம்பிரம மென்னு நவைபெருக்குங் குண்டர்களைச்
சாம்பிரம மென்றே தலைசாய்த்து—வேம்பொத்த
புத்த மதம்புகுந்த பொய்யர்கள் வீறடக்கி
யத்தனு ராடு மருண்மதுரைச்—சுத்ததமிழ்ச்
சங்கப் புலவனுய்ச் சம்பந்த ராதியோர்
சங்கரனு ரின்னருளாற் சாற்றிட்ட—துங்கமிகு
நல்லருட்பா மேன்மைகளை நம்பனடி யார்களிக்கத்
தொல்லுலகிற் சொல்லித் துகளறுத்துச்—சொல்லரிய
சத்தியர்கண் முன்பு சதாவதா னஞ்செய்து
பத்தியா யெங்குற்றாய் பாவலனே!—இத்தலத்தில்
நங்கள்பாற் குற்றமுண்டோ நற்கதிரை வேற்பெரியோய்
இங்கெமக்குச் சொல்லு மினி. (௨)

## கட்டளைக் கலித்துறை.

பன்னிரு தோளன் பதமல ரென்றும் பதித்தநெஞ்ச
என்னிரு கண்ணு ளிலங்கிடு மோர்மணி யேதமிலாப்
பொன்னிரு நாட்டிற் கெழுந்தனை யிங்குன் புகழ்விரிக்கும்
பன்னிரு மாமுறைச் சீர்சபை யென்செயும் பாரிடத்தே. (௩)

## அறுசீர்க்கழி நெடிலடி யாசிரிய விருத்தம்.

பன்னிரண்டு கரத்தனருட் பக்தஜன சபையடியார் பரவி வாழ்த்தும்
பன்னிரண்டு முறையருட்பா பக்தஜன சபையிரண்டும் பார்வை மிக்க
வுன்னிரண்டு கண்களென்றே யுரைத்துலகை யுவப்பித்த வுண்மைச் சைவ
வுன்னிரண்டு கண்களிவணொளிரவுட லெங்கொளித்தா யுரைத்தி மன்னே.

பராபவத்துப் பங்குனியிற் பதின்மூன்றாந் தினநேரும் பகாமுற் பக்கம்
பராபரனார் பரிகடத்துஞ் சேவகனு யாண்டவள்ளல் பரம ஞான
புராதனச்சீர் மகநாளிற் புங்கவற்குச் சித்தாந்தம் புகலச் சென்றாய்
தராதலத்தி லென்குருவே யுனையிழந்தே னென்றிரங்கித் தளரேனம்மா. (௫)

சைவநிலை யனமே தரணிதனிற் றருக்கமுடன் சாற்றி னுயர்
தெய்வநிலை ந் து தீவினையா லுனையிகழ்ந்தார் சிலரோ ரந்தோ
மெய்மையு நாந்த ம பலவாறு வடைந்ததொரு வேலை நேரென்
றுய்வதற் ரைவேணியுரைத்த மொழிக்கிணங்க வுரைப்பாருண்டோ.

திரைகட புவியதனிற் பௌத்தமுத லாஞ்சமயந் தெரிக்கு முண்மை
யுரைத்தத னுண்மையருட் பாவிதென வுலகமெலாமொளிரச் செய்தோ
கரைகண்ட லவசிகா மணியேநீ யரியவெலாங் கனிவா யாற்றி [ய்
நிரைதவிரு யாந்திருக்கச் சம்மதியா தகன்றனையோ நீர்மை மிக்கோய். ()

எக்காலும் ரா துநன்மை யியற்றுமொரு வருட்டொழிலே யினிமையென்று
இக்கால ரியிங்கே வியற்றுவதற் கரியதொன்று மிலையே யென்று
முக்கால ணர்ந்தவிண்ணோர் நகரடைந்து சைவநலம் மொழியச் சென்
எக்காலுந் தளராம லித்தொழிலே புரிவதுன்ற னியல்போ வையா. [ுய்

---

## கயப்பாக்கம் - வித்துவான்

## ஸ்ரீமந் - சதாசிவ செட்டியா ரவர்கள் B.A.

## இ ய ற் றி ய து.

---

திருமறு மார்பத தொருதனித் தேவுந்
தேன்முகக் கமல நான்முகத் தண்ணலும
ரானுநாட் டத்து வானுட் டமரும்
முற்றத் துறந்த நற்றவ முனிவரும்
மந்திரை மறைவள ரந்தத தொகுதியு
மெண்ணில் காலம் நணணினர் தேடியு
மின்ன தன்மைய னென்ன வுணர்கலா
பசுபதிப் பெயரிய பண்ணவன் றானே
பசுபதி யாம்பரி சுணர்வீ ரெனவுங்
கரணங் கடந்த கறைமிடற் றண்ணல்
சரணஞ் சேர்ந்தவன் றானே யாகித்
தந்தொழி லிழந்த தனிப்பெருங் கடவு
ளறந்தொழி லியற்று மருளாள ராகிக்
காழியில் வந்த கவுணிய ரிறைமுதற்
சைவா சாரிய தலைமை யாளரே
மெய்யா சிரியர் மேவுவீ ரெனவும்
அன்னவ ரருளும் அருட் பாசுரமே
பன்னருட் பாவெனப் பகர்வீ ரெனவுங்
கற்றவர் புலவரு மற்றவ ரெனையருந்
தெற்றன வுணர்தரத் தெருட்டிய மெய்யன்
பாத்திரஞ் சிவமெனப் பகர்தரு தெய்வ

